10th November 1961]

III.—GOVERNMENT MOTION.

THIRD FIVE-YEAR PLAN—MADRAS STATE (DISCUSSION)—*cont.*

DEPUTY SPEAKER : Now, let us continue the discussion on the Third Five-Year Plan. I have received some amendments. Hon. Members who have given notice of these amendments may now move them.

SRI R. KRISHNASWAMY NAIDU : Sir, I move—

" Add at the end the following :—

' and on such consideration, this Assembly gives its general approval and acceptance of the programmes embodied in the Third Five-Year Plan for the Madras State.' "

SRI A. S. DORAISWAMI REDDIAR : I second the amendment, Sir.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" Add the following at the end—

and on such consideration this House recommends—

(i) that the Government should take necessary steps to avoid inflation;

(ii) that the Government should take necessary steps to stabilise the prices of essential commodities; and

(iii) that the Government should give special emphasis to start small and medium industries in North Arcot district.' "

The amendment was duly seconded.

SRI K. ANBAZHAGAN : *தலைவர் அவர்களே, என்னுடைய பெயராலே தரப்பட்ட திருத்தத்தை நான் முன் மொழிகிறேன்—*

*அதன் இறுதிப்பகுதியில் கீழ்க்கண்டவற்றைச் சேர்த்திடுக :—*

*அவ்வாறு ஆலோசனைக்கு எடுத்துக்கொண்டதின் பேரில் இந்தச் சட்டசபை கீழ்க்கண்டவற்றை அரசாங்கம் இத்திட்டத்தில் நிறைவேற்ற முற்பட வேண்டுமென்று விரும்புகிறது—*

*(1) ஐந்தாண்டுத் திட்டக் குழுவில் மாநில அரசாங்கத்தின் பிரதிநிதி ஒருவர் இடம்பெறச் செய்யவேண்டும்.*

*(2) ஒரு மாநிலத்தில் எந்த எந்த திட்டங்களை உடனடியாகத் தொடங்குவது என்பதில், மாநில அரசாங்கக் கருத்துக்கே முதன்மை அளிக்கச் செய்யவேண்டும்.*

*(3) மக்கள் தொகை அடிப்படையிலும், சராசரி வருமானக் குறைவை ஈடு செய்யும் முறையிலும், தமிழ்நாட்டுக்கு ஒதுக்கிய தொகை குறைவாதலால் இத்தொகையை அதிகப்படுத்த வேண்டும்.*

*(4) முதல் இரண்டு திட்டங்களில் தமிழ்நாட்டுக்கு கிடைக்கத் தவறிய தொகையையும் இத்திட்டத்தில் சேர்த்துப் பெற வேண்டும்.*

(5) விலைவாசியைக் குறைத்து, ஓரளவில் கட்டுப்படுத்தித் திட்டச் செலவையும் கட்டுப்படுத்த முற்பட வேண்டும்.

(6) வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க வழி செய்ய வேண்டும்.

(7) இலங்கையினின்றும் திரும்பி அனுப்பப்பட்ட மக்களுக்கு வேலையளிக்கத் திட்டமிட வேண்டும்.

(8) கைத்தறி நெசவாளிகளுக்கென அவர் வாழும் பகுதியில் துணைத் தொழில்கள் தொடங்கப்பட வேண்டும்.

(9) அணுசக்தி மின் உற்பத்திக் கூடம் செயல் முறையில் தொடங்கப்பட வேண்டும்.

(10) சேலம் இரும்பு, எஃகு உற்பத்தித் தொழிற்சாலைக்கான முதலீட்டை ஒதுக்கி, திட்ட காலத்திலேயே நிறைவேற்ற வேண்டும்.

(11) சேது கால்வாய்—தூத்துக்குடி துறைமுக இணைப்புத் திட்டத்தினை—ஒன்றாகவே மேற்கொள்ள வழி செய்யவேண்டும்.

(12) காவிரி வட்டத்தில் கிடைக்கக்கூடிய எண்ணெயை எடுக்கவும்—எண்ணெய்த் தூய்மி நிலையம் ஒன்று அமைக்கவும் நிதி ஒதுக்க வேண்டும்.

(13) கனரக மின்சாரக் கருவித் தொழிற்சாலை ஒன்றை அமைக்க வேண்டும்.

(14) ஏற்படுத்தக்கூடிய மாவட்டந்தோறும், சிமெண்ட் தொழிற்சாலைகள், நூற்புத் தொழிற்சாலைகள், ஷார்க் எண்ணெய் தொழிற்சாலைகள், ஏற்படத் திட்டமிட வேண்டும்.

(15) கடலூர், பரங்கிப்பேட்டை, தொண்டி, நாகை போன்ற சிறு துறைமுகங்கள், சீர்திருத்தப் பெற நிதி ஒதுக்க வேண்டும்.

(16) சென்னை மாநகரின்—குடி நீர்த் தேவையை நிறைவு செய்ய காவிரியிலிருந்து நீர் கொணரும் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும்.

(17) சென்னை மாநகரக் கழிவுநீரைக்கொண்டு எரிவாயு, உற்பத்திக்கும் அதன் மூலம் மின்சார உற்பத்திக்கும்—துணைப் பொருளாக எரு உற்பத்திக்கும் திட்டமிடவேண்டும்.

(18) சென்னை நகர் நடுவில் நீர் தேங்கும் கூவத்தை முன்னர் நிபுணர்கள் ஆராய்ந்து கூறிய திட்டப்படி, படகு போக்குவரத்துக்குரிய கால்வாயாக அமைக்க வேண்டும்.

(19) சென்னைப்புறநகர் திட்டத்துக்கும்—பெருஞ்சாலை இணைப்புக்கும் வழி செய்யவேண்டும்.

(20) சென்னை மாநகர் நடைபாதை வாசிகளுக்கு குடியிருப்பு வசதி செய்யவேண்டும்.

(21) சென்னையிலிருந்து தெற்கே விழுப்புரம்—மேற்கே வேலூர் வரை—விரைவுப்பாதை (**Express Highways** ) அமைக்க வேண்டும்.

10th November 1961] [Sri K. Anbazhagan]

(22) சென்னையிலிருந்து அரக்கோணம் வரை மின்சார ரயில் பாதை மேற்கொள்ள வேண்டும்.

(23) தமிழ்நாடு அரசினரால் பல ஆண்டுகளாக கேட்கப் பட்டுவரும் புதிய ரயில்பாதைகளை இத்திட்டத்தில் நிறைவேற்றச் செய்யவேண்டும்.

(24) வெள்ளத் தடுப்புக்கு ஏதுவாக—காவிரியில் புது அணை கட்டுவது, மேட்டூர் அணை கரையை உயர்த்துவது, காவிரி யிலிருந்து புதுக்கோட்டை பகுதிக்கு கால்வாய் வெட்டுவது காவிரி கரையை உயர்த்துவது, கொள்ளிடத்தை ஆழப்படுத்துவது— ஆகியவற்றை மேற்கொள்ளவேண்டும்.

(25) பாலாற்றுக்கு நீர் கிடைக்க வழிகாண வேண்டும்.

(26) மதுரை விமான நிலையத்தின் தரத்தை உயர்த்த வேண்டும்.

(27) மதுரையில் ஓர் பல்கலைக்கழகம் அமைய வழிகாண வேண்டும்.

(28) அரசாங்க ஊழியர்கள், ஆசிரியர்கள், காவல் துறை யினர் ஆகியோரில் குறைந்த ஊதியம் உள்ளவர்கள் அனைவருக்கும் குடியிருப்பு வீடுகள் கட்டித்தர திட்டமிட வேண்டும்.

SRI P. U. SHANMUGAM : I second the amendment, Sir,

SRI N. K. PALANISAMI : Sir, I move—

Add at the end the following, viz.—

and on such consideration this House is of opinion that.—

(1) the Plan fails to draw the correct lessons from the experience of the earlier two Five-Year Plans and continues to suffer from certain fundamental defects in its approach, objectives and methods;

(2) the size and the scope of the Plan do not measure up to the imperative needs of rapid economic development and there is no dependable guarantee that the rate of growth, which is far from adequate, will be achieved;

(3) having regard to the growth of population, unless the rate of growth of the economic development is accelerated, it will be difficult to maintain even the existing level of living of our people and the promise of "the opportunity to lead a good life" to the masses would all but remain on paper;

(4) far from containing any effective proposals for an equitable and fair distribution of national income among various classes, the Plan continues the same old policies of its two predecessors which have resulted in enormous concentration of wealth in the hands of a few and growth of income disparities;

(5) the Plan does not at all offer in concrete terms any rise in the living standards of the working people and material incentive which is essential for rousing labour enthusiasm and for releasing the creative energy of our people;

[Sri N. K. Palanisami] [10th November 1961

(6) despite its proclaimed stress on agriculture, the Plan does not still come to grips with the crux of the problem of our agrarian economy, namely radical agrarian reforms to distribute land to the tiller of the soil;

(7) the Plan does neither assess the existing ceilings on landholdings nor make any proposals to enforce the ceiling in a manner that would break the concentration of land with a relatively small number of landlords and make larger quantities of surplus lands available to the State for distribution among agricultural labour and poor peasants;

(8) the Plan does not have adequate proposals to relieve pressure on land by creating and expanding alternative avenues of employment in our villages through rapid and wide-spread promotion of cottage and village industries;

(9) the Plan does not realistically review the experience of the rural co-operatives nor does it propose any radical orientation so as to eliminate the grip of the village exploiters over them and mobilise the people in a truly voluntary co-operative efforts,

(10) the proposals of the Plan for industrialisation are neither adequate nor balanced nor do they place adequate emphasis on the small and medium industries which have an important part to play in the present stage of our development.

(11) the growth of the Public Sector industries remain still restricted largely due to failure to nationalise certain industries and there is no promise, at the present rate of relative development of the public and private sector, that the latter is going to attain decisively the commanding heights in our economy, in the course of the next five years or even longer;

(12) the Plan exaggerates the role of the organized private sector and plays down its negative and retarding features under monopoly controls;

(13) the Industries in the private sector are not sufficiently brought within the purview of planning and much of its field is left open to operations in disregard of national priorities, and for sheer profit motive;

(14) the Plan does not propose effective measures through cost accounting under the aegis of the State and otherwise against manipulations by monopolists in respect of production costs, prices and so on;

(15) the approach of the Plan with regard to resources is conservative and conventional and in a great measure undemocratic and anti-people;

(16) the Plan does not recognise even in principle that in the conditions of our country an expanding and revenue yielding State Sector has to provide the main source of the wherewithal for planning while the taxes on the common man has to be reduced;

10th November 1961] [Sri N. K. Palnisami]

(17) the Plan relies more on taxes the incidence of which fall more and more on the working people while the upper strata of the rich are not adequately taxed;

(18) the Plan has no correct approach for mobilising to the fulllest possible extent for planned investment the savings in the corporate sector and in partnership concerns under the control of the big business.

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I move—

" Add at the end the fololwing, viz. :—

" and on such consideration the House is of opinion—

(1) that sufficient outlay has not been made and attention given to agriculture to cope up with the ever increasing population of the State;

(2) that sufficient steps have not been taken to increase the transport facilities, railways and waterways and roads to facilitate easy movement of goods to the State and out of the State;

(3) that sufficient outlay has not been provided for starting more large and medium industries to achieve rapid industrialisation;

(4) that sufficient attention has not been given to provide more power at cheap rates to industries to facilitate industrialisation;

(5) that there has been no appreciable increase in the relief of unemployment; and

(6) that no steps have been taken for lowering of price levels as a result of the first two Plans and the Third Plan which is likely to result in further inflation and increase of taxation."

SRI A. GOVINDASAMY : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The motion and the amendments are before the House for discussion.

**SRI P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியான வடிவம் இப்பொழுது இந்த சபை முன்பு விவாதத்திற்கு வைக்கப் பட்டிருக்கிறது. இந்த வடிவத்தைப் பற்றி ஏற்கெனவே இந்த சபையில் மிகவும் விரிவாக விவாதம் நடந்துவிட்டதால், இனி இந்தத் திட்டத்தை எந்த அளவிலே திறம்பட நிறைவேற்றுவது என்பது குறித்துத்தான் நாம் பேசவேண்டியிருக்கிறது. ஆகவே அது பற்றி இந்த சபையிலே, இன்றைக்கும், நாளைக்கும் மட்டுமல்ல, இந்தத் திட்ட காலம் முடியும் வரையிலும் நாம் பேசிக் கொண்டு இருப்போம். இந்தத் திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றுவதற்குரிய எல்லாவிதமான வழிவகைகளையும் நாம்

[Sri P. S. Chinnadurai] [10th November 1961

எல்லோரும் கலந்து பேசி, செயலாற்றுவதில் தக்க முயற்சிகள் அனைத்தையும் மேற்கொள்ளவேண்டும் என்ற மனப்பான்மையோடு, இந்தத் திட்டத்தின் அடிப்படை நோக்கங்கள் குறித்து நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். திட்டங்கள் அவசியமா என்ற கேள்வியைப் பொறுத்த வரையில், நாட்டில் யாரோ ஒரு சிலர் திட்டங்களே தேவையில்லை என்று பேசி வந்த போதிலும், இந்தியா போன்ற பின் தங்கிய நாட்டில் திட்டமிட்டுத்தான் பொருளாதாரம் வளரவேண்டும், திட்டமூலம்தான் மக்கள் முன்னேறவேண்டும் என்ற கருத்து வேரூன்றி இருக்கிறது. இந்த மக்கள் திட்ட மிட்டு முன்னேறுவதைத்தான் உறுதியாக எண்ணி, நம்பி வருகிறார்கள் என்று நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நாடு பொருளாதாரத் துறையில் பெரிய மாறுதலை அடைந்து கொண்டு வருகிறது; விரைவாக உயர வேண்டும் என்ற ஆவல் மக்களிடம் இருக்கிறது. மிக்க அவசியமாகத் திட்டங்கள் இட்டு முன்னேறவேண்டும் என்ற அவா மக்களிடம் வேரூன்றியிருக் கிறது. அதை அகற்றும் முறையில் குழப்பத்தை உண்டு பண்ணும் ரீதியில் ஒரு சில மேதாவிகள் முயன்றாலும், அது நிறை வேறாது. திட்டங்கள் போடுவதின் மூலம்தான் நாட்டை வளம் பெறச் செய்ய முடியும், அப்படித்திட்டங்கள் போடுவதிலும், அவற்றை நிறை வேற்றுவதிலும் தங்கள் தங்கள் பங்கை நிறை வேற்ற முன்வரவேண்டும் என்று மக்கள் ஆவலாக இருக்கிறார்கள். ஒரு சிலருடைய குழம்பிய பொருளாதாரத்தை, குழம்பிய சேற்றில் மீன் பிடிப்பது போன்ற முதலாளித்துவக் கொள்கையை, நாட்டிலுள்ள பெருவாரியான மக்கள் ஏற்கமாட்டார்கள், அதற்கு இடம் தர மாட்டார்கள். திட்ட மிடுவதில் இங்கும் அங்கும் ஏற்படும் எதிர்ப்புக்களைக் கண்டு அஞ்சி பின்வாங்க வேண்டிய அவசியம் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

திட்டங்கள் அவசியம்தான். திட்டங்களின் நோக்கம் என்ன ? திட்டங்கள் எந்த அடிப்படையில், எந்த லட்சியத்தை அடிப்படை யாகக்கொண்டு இருக்க வேண்டும் என்ற கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். ஏற்கனவே நாம் சமதர்ம பொருளாதார லட்சி யத்தை நம் நாட்டின் லட்சியமாக ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். இந்தியாவிலேயே சம தர்மத்திற்கு விரோதமாகப் பேசி வந்த போதிலும், இந்தியாவின் லட்சியம் சமதர்மம் என்று நாட்டின் பாராளுமன்றமே ஏற்றுக் கொண்டு இருக்கிறது. இந்த நாட்டில் உள்ள கட்சிகளுக்குள் பெரிய கட்சியாகவும், சுதந்திரம் பெற்ற நாள் முதல் ஆளும் கட்சியாகவும் இருந்து வரும் காங்கிரஸ் கட்சி சில ஆண்டு காலத்திற்கு முன்வரை சமதர்மத்தை ஏற்றுக்கொள்ள முடியாது என்று மறுத்து வந்தது. ஆனாலும், மாறி வரும் நாட்டு மக்களின் கருத்தை உணர்ந்து, அவர்கள் எண்ணங்களை ஆராய்ந்து, நம் நாட்டின் பொருளாதார லட்சியம் சமதர்மமாகத்தான் இருக்க வேண்டும், சமதர்ம பொருளாதாரத்தின் மூலம் தான் முன்னேற் றம் அடையவேண்டும், அப்படி அடைவதுதான் நாட்டின் லட்சி யம் என்ற தீர்மானத்தையும் நிறைவேற்றியிருக்கிறது. ஆகவே, இன்றைக்கு நாட்டில் பெருவாரியான மக்கள் விரும்புவது, சம தர்மப் பொருளாதார லட்சியம். அந்த லட்சியத்தை ஒரு கட்சி

10th November 1961] [Sri P. S. Chinnadurai]

யைத் தவிர, புதிதாகத் தோன்றியிருக்கும் ஒரு கட்சியைத் தவிர, மற்ற எல்லாக் கட்சிகளும் தங்கள் தங்கள் விளக்கத்திற்குத் தக்க படி சமதர்மக் கொள்கையை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

ஆகவே நாம் இடும் திட்டங்கள் அந்த சமதர்மப் பொருளா தாரத்திற்குத் தக்கபடி அமைய வேண்டும் என்பதில் நாம் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். இந்த விஷயத்தில் நான் ஆரஅமர நிதானித்துப் பேச விரும்புகிறேன். இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் இட்டு இருக்கும் முறையையும், ஒவ்வொரு துறைக்கும் ஒதுக்கியிருக்கும் தொகையையும் ஆராய்ந்து பார்க்கும் போது, நாம் ஏற்றுக்கொண்டு இருக்கிற சமதர்மப் பொருளாதார லட்சி யத்தை நோக்கி நாம் வேகமாக மக்களை நடத்திச் செல்ல அதற் குரிய வாய்ப்பினைக் கொடுக்கும் திட்டமாக இருக்கிறதா என்ருல், நாம் விரும்பும் அளவுக்கு வாய்ப்புகளை அளிப்பதாக இல்லை என்று சொல்ல விரும்புகிறேன். சமதர்ம பொருளாதார லட்சியத்தை நோக்கி மக்களைக் கொண்டு செல்லும் திட்டமாக இந்த மூன்ருவது திட்டம் அமையவில்லை. ஏதோ ஒரு தயக்கத்தை அடிப்படை யாகக்கொண்டு, ஒரு கலப்படப் பொருளாதாரத்தை அமைக்கப் போகும் திட்டமாகத் திகழ்கிறது. ஆட்சிப் பொறுப்பில் இருப்ப வர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன், இந்தத் திட்டம் நாம் ஏற்றுக் கொண்டிருக்கும் லட்சியத்திற்கு ஏற்ப, அதை நோக்கி தீவிரமாக, அதி வேகமாகச் செல்லக் கூடியதாக இல்லை. தனியார் துறைகளுக்கு குறைத்து, பொதுத் துறைகளுக்கு அதிகமாகத் தொகைகளை ஒதுக்க முற்பட்டிருக்கவேண்டும். அப்படிச் செய் வது நம் கடமை. இதனுல், தனியார் துறைக்கு ஒதுக்கப்பட் டிருக்கும் பல்வேறு தொழிற்சாலைகளை நாட்டில் ஏற்படுத்த வேண்டாம் என்ருே அல்லது அம்மாதிரி ஏற்பட்ட பிறகு அவை நடைபெருமல் இருக்கும் அதற்கு இடையூருக இருக்கும் ஒரு கொள்கையை அனுசரிக்க வேண்டுமென்ருே நான் விரும்பவில்லை. எனது கட்சியும் விரும்பாது. ஆனுல், இருக்கும் குறைகளை எடுத்துச் சுட்டிக்காட்டுவது என் கடமை. இந்த மூன்ருவது திட்டம் ஒரு கலப்படப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும் ஒரு திட்டம் என்று நான் எண்ணுகிறேன். ஆனுல், பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்தது என்ருல், அதை விட்டு விடுவதற்கில்லை. மேலும், மேலும், முனைந்து, முனைந்து நல்ல பிள்ளையாராகப் பிடிக்க முடியுமா என்று முயற்சி செய்ய வேண்டும் என்றுதான் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு அம்மாதிரி நிறைவேற்ற முடியாவிட்டாலும், அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது அப்படிச் செய்ய முடியுமா என்று இப்போதிருந்தே அடிகோலவேண்டும் என்பதுதான் என்னுடைய ஆசையாக இருக்கிறது. இம்மாதிரிக் கருத்துக்களைச் சொல்லும் போது, “சரி, உங்கள் கருத்துக்களை நீங்கள் சொல்லுங்கள், எங்கள் கருத்துக்களை நாங்கள் சொல்லுகிருேம். இரண்டையும் மக்கள் முன்னுலே வைக்கிருேம். தேர்தலில் மக்கள் என்ன தீர்ப்புச் சொல்லுகிருர்கள் என்று பார்ப்போம். அவர்கள் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுவோம்” என்று ஒரு புதிய கருத்தை, புதிய

[Sri P. S. Chinnadurai] [10th November 1961

கருத்து என்று கூடச் சொல்ல மாட்டேன், ஒரு புதிய பிரசார தந்திரத்தை நிதி அமைச்சரவர்கள் நேற்று சபைமுன் எடுத்து கூறியிருக்கிருர்கள். நான் கேட்கிறேன், இந்த மூன்ருவது திட்டம் காங்கிரஸ் கட்சியின் திட்டம் என்று அவர்கள் நினைக்கிருர்களா? அப்படியானுல், திட்டத்தை உருவாக்குவதில் ஆலோசனைகள் கொடுக்கவும், திட்டத்தை உருவாக்கவும், ஒரு சர்வ கட்சிக் குழுவை ஏற்படுத்தியிருக்க வேண்டிய அவசியம் என்ன? ஆகவே, நாம் ஆலோசனைகள் செய்து, 400 கோடி ரூபாய் அளவுக்குத் திட்டம் வகுத்து, பின்னுல் எல்லா இராச்சியங்களும் தங்கள் தங்கள் கருத்துக்களை சொன்ன பிறகு மேல் இடத்தில், அகில இந்திய ரீதியில் ஆலோசனை செய்து குறைத்துக் கொண்டோம். அப்படிக் குறைத்துக் கொண்டதில் கருத்து வேறுபாடு வந்தது. அதைப் பற்றி ஒரு தடவை சொல்லியாகி விட்டது. சண்டை போட்டிருக்க வேண்டும், துணிச்சலாக நடந்துக் கொண்டிருக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லி முடிந்தாகி விட்டது. இப்பொழுது திட்டம் நம் முன்னுல், சபை முன்னுல் இருக்கிறது. அதை நாம் அமல் நடத்தும் கட்டத்தில் இருக்கிருேம். அதில் ஏற்பட்ட குறைபாட்டையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு, திட்டம் நிறைவேறுவதற்கு இடையூருக இருப்பதில் எனக்கு அக்கரை யில்லை. இருக்கும் அளவில், 291 கோடி என்பதை கூடுமான வரையில், 10, 50 கோடிகள் அதிகமாக வாங்கக் கூடிய வாய்ப்புக்களை தேட வேண்டும் என்பதுதான் என் எண்ணம். அதை விட்டு, திட்ட அளவு குறைந்து போனதற்காக, குறைவையே சொல்லிக்கொண்டு, மேலும் நான்கு ஆண்டுகள் என் மூச்சை விரைக்க விரும்பவில்லை. இருக்கும் அளவில் திட்டங்களைச் சரிவர நிறைவேற்ற வாய்ப்புகளைத் தேடவேண்டும் என்கிற ஆசைதான் எனக்கு இருக்கிறது. ஆனுல், இதை காங்கிரஸ் கட்சி ஒரு தேர்தல் சாசனமாக பயன்படுத்தினுல், அது சரியாகாது, நன்மையில்லை என்று சொல்ல விரும்புகிறேன். அரசாங்கம் என்பது, அவ்வப்போது ஏற்படுகின்ற அமைச்சர் அவையைப் பொறுத்து கொள்கைகள் தீர்மானிக்கப்பட்டாலும் அரசாங்கம் என்பது என்றைக்கும் நிரந்தரமாக உள்ளது. அது எப்பொழுதும் நிரந்தரமாகத்தான் இருந்து கொண்டிருக்கும். அந்த அரசாங்கத்தை யார் நடத்தினுலும் அதற்கு எல்லாரும் துணை கொண்டு போடப்படும் திட்டங்களை எடுத்து நடத்த வேண்டும். திட்டங்களை உருவாக்க வேண்டும். ஆயிரம் ரூபாய் அளவுக்கு திட்டம் போட வேண்டும் என்று சொன்னுலும் ஏதோ ஒரு அளவுக்கு அந்த திட்டம் குறைக்கப்பட்டிருக்கிறது. ஆயிரம் கோடி ரூபாய் அளவில் நாம் திட்டம் போட்டு அதை நிறைவேற்ற வேண்டுமென்ற எண்ணம் இருந்தாலும்கூட அந்த ஆசையை நிறைவேற்ற முடியுமா முடியாதா என்பதைப் பார்க்க வேண்டும். ஆகவே திட்டம்போட வேண்டியது அவசியம். அது யாரால் போட்ட திட்டமாக இருந்தாலும் அதை நிறைவேற்றியாக வேண்டும். அதை நிறைவேற்றுவதில் அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. அப்படி அபிப்பிராய பேதம் இருந்தால் அவர்களால் அந்த திட்டங்களை நிறைவேற்றவே முடியாது. அப்படி அபிப்பிராய பேதம் இருந்தால் அந்த திட்டத்தை உருவாக்கக்

10th November 1961] [Sri P. S. Chinnadurai]

கூடிய குழுவில் இடம் பெற்றிருக்க வேண்டிய அவசியமே இல்லே என்று நான் நினைக்கிறேன். ஆகவே இப்பொழுது போடப்பட்டிருக்கும் திட்டம் காங்கிரஸ் கட்சியின் பொது திட்டம் அல்ல. இந்த திட்டம் எல்லா கட்சிகளாலும் தான் போடப்பட்ட திட்டம், தனி திட்டம் அல்ல.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** நான் சொன்னதில் இரண்டு வித கருத்துக்கள் இருக்கின்றன. ஒரு பகுதி திட்டம் வேண்டும் என்று சொல்லுகிறுர்கள், இன்னெரு பகுதி திட்டம் வேண்டாம் என்று சொல்லுகிறுர்கள். இந்த திட்டம் மக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடிய அளவில் தான் போடப்பட்டிருக்கிறது. அந்த அளவில் தான் நேற்றைய தினம் நான் சொன்னேன். அதற்கு ஆதரவு கொடுக்காதவர்கள் அதற்கு தப்பு சொல்லிக் கொண்டிருக்கிறுர்கள் என்ற கருத்தை நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

**Sri P. S. CHINNADURAI :** கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் கொடுத்ததற்கு நன்றி செலுத்துகிறேன். இது ஒரு கட்சியின் திட்டம் அல்ல. இது தேர்தல் பிரசாரம் என்று சொல்ல முடியாது. இது தேர்தல் சாசனம் என்றும் சொல்ல முடியாது என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். இந்த திட்டத்தை எல்லா கட்சிகளும் ஒன்று பட்டு நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. இதில் பல குறைபாடுகள் இருக்கலாம். அப்படி இருந்தால் அதை மக்களிடம் எடுத்துக் காட்டி அதற்கு பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும். குறைபாடுகள் இருந்தால் அதை அமைச்சரவைக்குச் சொல்லி அதை மக்களிடம் சொல்ல வேண்டும். திட்டத்தை எடுத்து நிறைவேற்றக்கூடிய காலத்தில் அந்தக் குறைகளை எடுத்துச் சொல்லி அவற்றைப் போக்கி அதை நீக்குவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி நிறைவேற்றும் வகையில் மக்களுக்கு நன்மையைச் செய்ய முற்படவேண்டும். இந்த திட்டத்தை நிறைவேற்றும்போது எல்லோரும் ஒரு மனப்பட்டு ஒரு மனதுடன் சேர்ந்து நிறைவேற்றவேண்டும் என்ற என்னுடைய எண்ணத்தை, என்னுடைய ஆவலே எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சரி அந்தக் கட்சி இந்த திட்டத்தை எடுத்து நிறைவேற்ற முன் வர வேண்டும். எந்த விதமான மாறுதல் இல்லாமலும் நிறைவேற்ற முற்பட வேண்டும், என்பதில் யாருக்கும் எந்த விதமான பயமும் இல்லே. இந்த திட்டம் வேண்டாம் என்று சொல்லுகிற கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அவர்கள் கூட இந்த திட்டத்தை எடுத்து நிறைவேற்றத்தான் வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். அதிலிருந்து அவர்கள் தப்பி விட முடியாது, என்பதை நான் உறுதியாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆகவே திட்டங்களே நிறைவேற்ற முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும், திட்டத்தில் கவனம் செலுத்த வேண்டும், அது இருக்கிற அளவில் அதற்கு முதலிடம் கொடுக்க வேண்டும்.

சுமார் 108 கோடி ரூபாய் ஏற்கெனவே நாம் திட்டமிட்ட அளவில் குறைந்து விட்டது. அதில் பெரும் பகுதி விவசாயத்திற்கும்

[Sri P. S. Chinnadurai] [10th November 1961

மின்சாரத்திற்கும் செலவிடப்பட வேண்டியது போய் விட்டது. இந்த இரண்டு அம்சங்களில் தான் குறைந்து போய் விட்டது என்பதை நாம் நினைவு படுத்திக்கொள்ளவேண்டும். ஆகவே வருகின்ற ஆண்டில் கூடுமான வரையில் மின்சார வளர்ச்சிக்கும் விவசாய அபிவிருத்திக்கும் அதிகப்படியாக செலவு செய்வதற்கு நாம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.

மின்சாரத் துறையைப் பொறுத்த வரைக்கும் நாம் ரொம்பவும் முன்னேறியிருக்கிறோம் என்று கனம் அமைச்சர் அவர்கள் அடிக்கடி பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால் நம்முடைய நாட்டில் மின்சார வளர்ச்சி வேண்டிய அளவு முன்னேற்றமடையாமல் இருக்கிறது என்பதைக் காட்ட எவ்வளவோ உதாரணங்கள் கொடுக்கலாம். குறிப்பாக ஒரு உதாரணத்தைச் சொல்லலாம். உதாரணமாக அமெரிக்காவை எடுத்துக்கொண்டால் அங்கு இன்றைக்கு அடைந்திருக்கும் மின்சார அபிவிருத்தியை கணக்கிட்டுப் பார்த்தால் 1965-ம் ஆண்டில் அங்கு மின்சார அபிவிருத்திக்கும் இங்கு ஏற்படும் மின்சார அபிவிருத்திக்கும் கணக்கிட்டுப் பார்த்தால் அங்கு 100 என்றால் அதில் மூன்று சத விகிதம்தான் இங்கு உற்பத்தி பண்ணுவதாகத் தெரிய வரும். அந்த அளவில் நாம் குறைந்திருக்கிறோம்.

அதேமாதிரி உருக்கு விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் 1965-ம் ஆண்டில் அங்கு ஏற்படப்போகிற உற்பத்திக்கும் இங்கு ஏற்படப்போகிற உற்பத்திக்கும் கணக்கிட்டுப் பார்த்தால் நாம் அவர்களில் நான்கு சத விகிதம் தான் உற்பத்தி செய்யக் கூடியதாக ஏற்படும். அமெரிக்க உற்பத்தியில் நம்முடைய உற்பத்தி நான்கு சத விகிதம் தான் இருக்கும். ஆனால் மின்சாரத் துறையில் நாம் எவ்வளவோ அபிவிருத்தி அடைந்து விட்டோம் என்று பெருமைப் பட்டுக்கொண்டிருக்கிறோம். அமெரிக்கருடைய லட்சிய அளவிற்கு நாம் எப்பொழுது போவோம் என்பதை நாம் கணக்கெடுத்துப் பார்க்க வேண்டும். அந்த முறையில் நாம் செயல்பட எவ்வளவு காலமாகும் என்பதையும் கணக்கெடுத்துப் பார்க்க வேண்டும். ஆகவே நாம் எல்லாவற்றிலும் அபிவிருத்தி அடைந்து விட்டோம் என்று சொல்லிக்கொள்ள முடியாது.

அதே மாதிரி நீர்ப்பாசன திட்டங்களை எடுத்துக்கொண்டாலும் நாம் அடைந்திருக்கிற முன்னேற்றம் மிகவும் குறைவுதான். என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நம்முடைய ராஜ்யத்தில் பல பகுதிகளில் பாசனத்திற்கு வழி வகை காணப்படவில்லை. பாசனத்திற்கு இன்னும் எவ்வளவோ முயற்சிகள் எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இன்னும் எவ்வளவோ பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் நிறைவேற வேண்டியதாக இருக்கிறது. காவிரி கங்கை இணைப்பு திட்டத்தை எடுத்து நிறைவேற்றினால் அதனால் தமிழ் நாட்டிற்கு எவ்வளவோ நன்மை ஏற்படலாம். அந்த பெரிய திட்டம் பாக்கியாக இருக்கிறது. அதனால் பாசன வசதி அடைவது தமிழ் ராஜ்யம் மட்டும் அல்ல ; மற்ற ராஜ்யங்களுக்கும் வசதி கிடைக்கும். மற்ற பகுதிகளில் வரட்சியாக

10th November 1961] [Sri P. S. Chinnadurai]

இருக்கக்கூடிய இடங்களுக்கெல்லாம் பாசன வசதி கிடைக்க முடியும். இந்த திட்டத்தை எடுத்து நிறைவேற்றுவது ரொம்பவும் அவசியம். இதைப்பற்றி பல நிபுணர்கள் சொல்லி வருகிறார்கள். இப்படிப்பட்ட எண்ணம் நிபுணர்களிடத்தில் வந்தால் போதாது. அரசியல்வாதிகளிடத்தில் வரவேண்டும். அவர்களிடத்தில் வந்தால்தான் அது உருவாவதற்கு முடியும். ஆகவே இப்படிப் பட்ட பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் எல்லாம் எடுத்து நிறை வேற்ற வேண்டியதாக இருக்கிறது. இதை எடுத்து நிறைவேற்றிக் கொடுத்தால்தான் பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் எல்லாம் எடுத்து நிறைவேற்றியாகி விட்டன என்ற ஆறுதல் ஏற்படும்.

சிறிய நீர்ப்பாசனங்களைப் பொறுத்த மட்டில் இன்னும் எவ்வளவோ நிறைவேற வேண்டியதாக இருக்கிறது. பழைய குளம் குட்டைகளையே நம்மால் தூர் எடுக்க முடியவில்லை. நிபுணர்கள் இல்லாமல் இஞ்சினியர்கள் இல்லாமல் கல்லூரிகள் இல்லாமல் ஐந்தாண்டு திட்டங்கள் இல்லாமல் வெகு காலத்திற்கு முன் பழைய தலைமுறையில் ஏற்பட்ட குளம் குட்டைகளை அவர்கள் வண்டல் இல்லாமல் வைத்துக்கொண்டு வேண்டிய தண்ணீரைத் தேக்கி வைத்துக்கொண்டிருந்தார்கள். எப்பொழுதும் தண்ணீர் அவற்றில் நிறைய இருக்கும். அந்த நிலைமை இப்பொழுது போய் விட்டது. இனிமேல்தான் நாம் நாலாயிரம் குளம் குட்டைகளை தூர் எடுக்கப்போகிறோம். பல ஆயிரக்கணக்கான குளம் குட்டைகள் தூர் எடுக்கப்படாமல் இருக்கின்றன. அவைகளையெல்லாம் எடுத்து நடத்தினால் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களும் நிறைவேறியதாகக் கருதலாம். ஆகவே அதற்கும் வழி வகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member has got two more minutes.

**SRI P. S. CHINNADURAI :** ஆகவே சிறிய நீர்ப்பாசன திட்டங்களுக்கு அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும். அத்துடன் பரம்பிக்குளம் திட்டம் இருக்கிறது. அங்குள்ள எஞ்சினியர்கள் எல்லோரும் சொல்கிறார்கள்—அவர்களைப்பற்றி நான் குறை கூறவில்லை—கீழே இருக்கக்கூடிய தண்ணீரை மேடான இடத்திற்குக் கொண்டுபோக முடியாது என்று சொல்லுகிறார்கள். சாதாரணமாக தாழ்வான இடங்களில் இருக்கக்கூடிய தண்ணீரை மேடான இடங்களுக்குக் கொண்டு போகக்கூடிய திட்டங்களை அவர்கள் எடுத்து நடத்துவதாக இல்லை. சாதாரணமாக ஐம்பது அடி உயரம் கொண்டு போக வேண்டியதாக இருந்தாலும் அவர்கள் அதற்கு திட்டம் வகுக்க முன் வருவதாக இல்லை. அப்படி திட்டம் வகுத்தால் தான் வரண்ட பகுதிகளுக்கும் தண்ணீர் கொண்டு போவதற்கு வழி ஏற்படும். கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அவர் அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்து வந்திருக்கிறார். அங்கே காலிபோர்னியா என்னும் இடத்தில் சுமார் 7,000 மைல்களுக்கு தண்ணீரைக் கொண்டு போய் அதற்கு மேல் 3,000 அடி உயரத்திற்குக் கொண்டு போய்க்கொண்டிருக்கிறார்கள். அப்படிக்கொண்டு

போய் அங்கு உயரத்தில் தண்ணீர் சப்ளை செய்கிறார்கள். ஆனால் இங்கு ஐம்பது அல்லது நூறு அடி உயரத்திற்குக் கூட தண்ணீர் கொண்டு போவதாக இல்லை. சில லட்சம் ரூபாய் செலவு செய்தாலும் கூட ஐம்பது அடி உயரத்திற்கு தண்ணீரைக்கொண்டு போவதற்கு திட்டம் வகுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதில் கொஞ்சம் கவனம் செலுத்தினால் பல்லடம் போன்ற உயர்ந்த இடங்களுக்கு தண்ணீரைக் கொண்டு போய் பாசன வசதி செய்து கொடுக்கலாம். அதற்கு வேண்டிய வழி வகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நொய்யல் நதியின் தண்ணீரைச் சரியானபடி பயன்படுத்துவதில்லை. வெள்ளப்பெருக்கு ஏற்படும்போது தண்ணீர் வீணாகிக் கொண்டிருக்கிறது. வெள்ளத் தண்ணீரைச் சரியான முறையில் பயன்படுத்த புதிய திட்டம் வகுப்பதன் மூலம் பல்லடம் தாலுகாவில் அதிகமான விஸ்தீரணத்திற்குப் பாசன வசதி கிடைக்கும் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

10.00 a.m

குந்தா கழிவுத் தண்ணீர்த் திட்டத்தையும் நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி நிறுத்தி விடாமல், உண்மையிலேயே பயன்படத்தக்க முறையில் நிறைவேற்றவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

பாரம்பிக்குளத் திட்டத்தைப் பொறுத்த வரையில் இன்னும் 50,000 ஏக்கராவுக்குத் தண்ணீர் பாய வழிவகை காணமுடியும், கேரள சர்க்காரோடு பேச்சு வார்த்தை நடத்துவதன் மூலம் அந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியும் என்று நான் அறிகிறேன். அது சம்பந்தமாகப் பேச்சு வார்த்தை துவங்கி விட்டார்களா, துவங்கியது எந்த நிலைமையில் இருக்கிறது என்று நமக்குத் தெரியவில்லை. பாரம்பிக்குளத் திட்டம் நிறைவேற்றப் படும் காலத்திலேயே பேச்சு வார்த்தை முடியப்பெற்று, அதிகப் படித் தண்ணீர் இன்னும் 50,000 எக்கராவுக்குக் கிடைக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நான் வேண்டிக் கேட்டுக் கொள்கின்றேன்.

அடுத்து ஒரு பிரச்னையைப் பற்றிக் கூறி என் உரையை முடித்துக்கொள்கின்றேன். தமிழ்நாட்டிலே விவசாயிகளுக்கு நல்ல துணைத் தொழிலாக இருக்கும் முறையில் பால் பண்ணை அமைப்பதும் கோழிப்பண்ணை அமைப்பதும் இருக்கின்றன. அவை குறித்து இந்தத் திட்டத்தில் ஓரளவுக்கு அதிகப்படியாகத் தொகை ஒதுக்கியிருந்தாலும், ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை போதாது. எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சி போதாது. இதை இன்னும் அதிகப்படுத்துவதற்கு வழிவகை உண்டா என்று ஆராயவேண்டும். குறிப்பாக, வரட்சியாக இருக்கும் கோவை, இராமநாதபுரம் ஜில்லாக்களில் கோழிப் பண்ணை, பால் பண்ணைகளை அதிகப்படுத்துவதற்கு மார்க்கம் உண்டா என்பதைக் கண்டறிந்து அவைகளை முடித்துக்கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். கோழிப் பண்ணை, பால் பண்ணை வைப்பதென்றால், நடுத்தரக் குடும்பத்திற்கு அதிலே

10th November 1961] [Sri P. S. Chinnadurai]

ஒரு கூச்சம் இருக்கிறது. இவைகளை ஒரு இழிவான தொழிலாகக் கருதிவிடுகிறார்கள். அந்த நிலையை மாற்றும் வகையில் கோழிப் பண்ணை, பால் பண்ணை வைக்க ஏற்பாடுகள் செய்து கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

கடைசியாக ஒரு வார்த்தை. இந்தத் திட்டம் எல்லோருடைய திட்டம்தான். இதிலே குறைபாடுகள் இருந்தாலும் எல்லோரும் சேர்ந்து நிறைவேற்றவேண்டிய திட்டம்தான் என்ற எண்ணத்தோடு நாம் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொள்வோம் என்று சொல்லி என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கின்றேன்.

* **Sri R. SRINIVASA IYER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மூன்றாவது திட்டம் சென்னை மாநிலம் சம்பந்தப்பட்ட வரையில் கொண்டுவரப்பட்டிருப்பதை ஒப்புக்கொண்டு, கனம் திரு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை ஆமோதித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

மனிதனுடைய தேவைக்குக் கணக்கு இல்லை. எவ்வளவு கொடுத்தாலும் எவ்வளவு இருந்தாலும் இன்னும் அதிகம் தேவை என்பதுதான் பண்பு. அது நியாயமும்கூட. நம்முடைய பொருளாதார வசதி எந்த அளவு இருக்கிறது, அதில் எந்த அளவு நாம் ஐந்தாண்டுகளுக்குள் செலவு செய்யக்கூடும், எந்த எந்த வகையிலே செலவு செய்தால் நல்ல முறையில் நாட்டை முன்னேற்றத்திற்குக் கொண்டுவரலாம் என்பதை நிபுணர்கள்கூடி பல வருஷங்களாக ஆலோசனை செய்துத் திட்டமிட்டிருக்கிறார்கள். 290 கோடி ரூபாய் நம்முடைய மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டிருப்பது போதாது என்று பல புள்ளி விவரங்கள் சொல்லி வாதாடப்படுகிறது. ஆயிரம் கோடி இருந்தால் பரவாயில்லை, இரண்டாயிரம் கோடி இருந்தால் கொஞ்சம் நன்மை தான், அதற்குமேல் ஆயிரம் கோடி இருந்தாலுங்கூட நன்றாக இருக்கும் என்று சொல்லலாம். எந்த வகையிலே இந்தத் தொகையைத் திரட்டுவது? நமக்கு என்னவிதமான டெக்னிகல் பர்ஸானல் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு இருக்கிறார்கள் என்று பார்த்துச் சொல்ல வேண்டும். சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில், இந்தப் பத்து வருஷங்களாக நாம் எந்த அளவு முன்னேறியிருக்கிறோம் என்பதைக் கணக்குப் போட்டு இந்தப் புஸ்தகத்திலே கொடுக்கப்பட்டிருப்பதைப் பார்த்து நாம் மேலும் மேலும் திட்டமிட்டுக்கொண்டு போவதுதான் சரியாக இருக்கும். நேற்றைய தினம் செக்ரடேரியட்டிலிருந்து அழகான ஒரு கம்பாரிடிவ் ஸ்டேட்மென்ட் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கும்போது, மற்ற மாநிலங்களோடு நம் மாநிலத்தின் ஜனத்தொகையையும் பரப்பையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பாகுபாடு இருக்கிறதா என்றால் இல்லை. நம்முடைய மாநிலத்திற்கு ஜாஸ்தியான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. 11,000 கோடி ரூபாயைப் பகிர்ந்து கொடுக்கப்பட்டிருப்பதிலே ஆந்திரப் பிரதேசத்திற்கு 305 கோடி ரூபாயும், எஞ்சிய சென்னை ராஜ்ஜியத்திற்கு 290 கோடி ரூபாயும், மத்தியப் பிரதேசத்திற்கு 300 கோடி ரூபாயும், குஜராத்

துக்கு 235 கோடி ரூபாயும், மேற்கு வங்காளத்திற்கு 250 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டிருப்பது தெரிய வருகிறது. மேற்கு வங்காள மாநிலம் நம் மாநிலத்தைக் காட்டிலும் ஜனத்தொகை அதிகமாக உள்ள ஒரு மாநிலம். புள்ளி விவரத்தைப் பார்க்கும் போது, நமது அமைச்சர்கள் தேசீய அபிவிருத்திக் கவுன்சிலில் நம் மாநிலத்திற்கு எவ்வளவு தேவைப்படுமோ அதைப் பெற்றிருக் கிறார்கள். ஐந்து வருஷங்களில் எந்த அளவுக்கு அதை நல்ல வகையிலே பிரயோஜனப்படுத்த முடியுமோ அந்த வகையிலே தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அமைச்சர் அவர்கள் நேற்று இதைப்பற்றிப் பேசும்போது, இதை இன்னும் ஜாஸ்தியாகச் செய்து கொள்ளலாம், அதற்கு வழிவகை இருக்கிறது, மாற்றிக் கொள்ளலாம் என்றெல்லாம் சொன்னார்கள். அதே நேரத்தில், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கியதைவிட நாம் ஜாஸ்தி யாகச் செலவு செய்திருக்கிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் கொடுத்ததைப் பார்க்கிலும் ஜாஸ்தியாகச் செலவு செய்திருக்கிறோம். ஆகையால், இந்தத் திட்டத்தை ஒற்றுமை யாக இருந்து நிறைவேற்றுவதற்கு நாம் வழிவகை கண்டு, எந்த எந்த வகையிலே மாற்றிக்கொள்ளலாமோ அந்த அந்த வகையிலே சுமாராகப் பொருளாதாரத்திற்குத் தக்கபடி அதிகப்படுத்திக் கொள்ளலாம். இதை நிறைவேற்றி நாம் நன்மை அடைய வேண்டியது நம்முடைய கடமையாகும்.

முக்கியமாக இரண்டொரு விஷயங்களைப் பற்றி மட்டும் விவர மாகச் சொல்ல முன்வருகிறேன். முதலாவது 'ரோட் ட்ரான்ஸ் போர்ட்'. நம் மாநிலத்தில் பெரும் சாலைகள் நல்ல நிலைமையில் இருப்பவை மிகவும் குறைவு. விஸ்தீரணத்தைப் பார்த்தால், மைல் கணக்கில் பார்த்தால் போதுமானதாக இல்லை. தேசீய அபி விருத்திக் கவுன்சிலிலும், திட்டக் கமிஷனிலும்கூட, விவசாயமோ தொழிலோ வேறு எந்தத் திட்டம் விருத்தியாகவேண்டுமானாலும் நல்ல ரோடுகள் அமைக்கப்படவேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், நாக்பூர் ப்ளான் என்று 1943-ம் வருஷத்திலே போட்ட திட்டத்தை இப்பொழுது புதிதாகக் கொண்டுவந்து 1981-ம் வருஷம் வரையில் 20 வருஷங்களுக்கு ஒரு திட்டம் போட்டு இந்த இருபது வருஷ காலத்திற்கு நாட்டு மக்கள், கிராம மக்கள் காத்துக்கொண்டிருக்க வேண்டியிருக்கிறது. இந்த ஜெனரேஷனில் அந்தத் திட்டம் முடியாது. ஆகவே, அம்மாதிரி யான திட்டத்தை வகுத்து இருபது வருஷ காலத்திலே ரோட்டைப் பராமரிப்போம் என்று சொல்லியிருக்கிறார்கள். சென்னை 3-வது திட்டம் தமிழ் புத்தகம் 130-வது பக்கத்தில் குறிப் பிட்டிருப்பதாவது :

"தேசீய பெருஞ்சாலைகளுக்கான தொகை மத்திய ஐந் தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளது. அனைத்து இந்திய அடிப்படையில் இச்சாலைகளுக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 47.50 கோடி. நமது மாநிலத்தைப் பொருத்த வரையில் இச் சாலைகள் சம்பந்தமான தெளிவான வேலைத் திட்டம் ஏதும்,

10th November 1961] [Sri R. Srinivasa Iyer]

இன்னமும் உருவாகவில்லை. நமது மாநில அரசாங்கம் தேசீய பெருஞ்சாலைகள் வேலைத் திட்டத்தின்கீழ் அடியிற்காணும் சாலை களை மேற்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தியுள்ளது:—

(அ) சேலம்–கடலூர்.

(ஆ) தூத்துக்குடி–கோவில்பட்டி.

(இ) பங்களூர்–சென்னை விரைவுச்சாலை.

(ஈ) கிழக்கு கடற்கரைச் சாலை."

ஆனால், எனக்குத் தெரிந்தவரையில், இந்த நான்கு திட்டங்களில் ஒன்று கூட இந்த மாநிலத்திற்காக ஒப்புக்கொள்ளப்படவில்லை மத்திய ப்ளானிங் கமிஷனால் என்று திட்டவட்டமாகத் தெரிகிறது. கிழக்குக் கடற்கரைச் சாலை ஆறு ஜில்லாக்களுக்கு உபயோகப் படக்கூடியது. ஜனங்கள் குடியிருக்கும் இடத்திற்கு ரோடு போடு வதா, அல்லது ரோடு போட்ட பிறகுதான் ஜனங்கள் குடியிருக்க வசதி ஏற்படுமா என்பது பிரச்னையாக இருந்துகொண்டிருக்கிறது. ரோடு இல்லாத இடங்களுக்கு எப்படியும் கண்டிப்பாக ரோடு போட்டாகவேண்டும். தஞ்சை மகாராஜா 120 அடி அகலத்திற்கு கிழக்கு கடற்கரைச் சாலை போட்டிருக்கிறார். அது இன்றைக்கு எட்டடி அகலம் தான் இருக்கிறது. சில இடங்களில் ரோடு இருக் கிற இடம் கூடத் தெரியவில்லை. இது மிகவும் முக்கியமான சாலை ஆகும். சென்னை-கன்யாகுமரி சாலைக்கு ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கப்போவதாக நமது மாநிலத்திலிருந்து வற்புறுத்தியும்கூட ஒரு ரூபாய் கூடக் கிடைக்கவில்லை என்று தெரிகிறது. இது தவிர, தேசிய பெருவழிச் சாலை (நாஷனல் ஹைவேஸ்)-க்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமது மாநிலத்திற்கு புதிதாக ஒரு மைலுக்குக்கூட தொகை ஒதுக்கப்படவில்லை. இதற்கு வழிவகை தேடவேண்டும். இந்த நான்கு தேசீய பெருஞ்சாலைகளில் கிழக்குக் கடற்கரைச் சாலையைப்பற்றி நான் மிகவும் வற்புறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

சென்னையிலிருந்து முத்துப்பேட்டை வரையில் பஸ் போக்கு வரத்து ஏற்படும் லெவலில் ஏற்பட்டிருக்கிறது. தஞ்சை ஜில்லா பூராவிலும் 153 மைல் நீளத்தில் இம்மாதிரி ஒரு மரீனா உலகத் திலேயே இல்லை என்று சொல்லக்கூடும். 540 மைல் தூரம் சென்னை மாநில கீழ்க் கடற்கரை இருக்கிறது. இதிலே 153 மைல் தஞ்சை யில் இருக்கிறது. சமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டே 100 மைல் தூரம் பிரயாணம் செய்யலாம். 120 அடி அகல ரோடு இருந்து வந்தது. அந்த ரோட்டை நாஷனல் ஹைவேஸாக மாற்ற வேண்டியது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது. இதில் குறுக்கே பாலம் இல்லாத இடங்களில் பாலம் போட வேண்டியதும் அவசியம். ராஜாமடம்அருகே அக்னியாறு, தாபேந்திரபட்டணம் அருகே பங்யாங்களானி ஆறு, அம்மணி சத்திரம் அருகே அம்புலி யாறு, மீமிசல் ஆறு அருகே பாம்பாறு, வெள்ளாறு ஆகிய ஐந்து ஆறுகளுக்கும் பெரிய பாலங்கள் கட்டவேண்டும். (கனம் ஸ்ரீ. வி. ராமையா: பாம்பாறு?) மீமிசல் ஆற்றைத்தான் பாம்பாறு என்று சொல்வார்கள். இந்த ஐந்து ஆறுகளுக்கும் பெரிய பாலங்கள்

[Sri R. Srinivasa Iyer] [10th November 1961

கட்டத் திட்டங்களைப் போட்டுவிட்டால் சென்னையிலிருந்து இராமேசுவரத்திற்கு நேராக பஸ் விடலாம். ஜனங்களுக்கு நல்ல ரோடு வசதியைச் செய்துகொடுத்தால் விவசாயப் பொருள்களை மார்க்கெட்டுக்குக் கொண்டுபோக வசதி இருக்கும். கிழக்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து மீன்களைக் மார்க்கெட் செய்வதற்கு ரோடு வசதி இருந்தால் ஜனங்களுக்கு ரொம்பவும் திருப்தியாக இருக்கும். இவ்வாறு இந்தச் சௌகர்யம் வேண்டும் என்று கிராமத்திலுள்ள மக்கள் கேட்கிறார்கள். ஆனால் நாம் அதற்காக ஒன்றும் ஒதுக்கவில்லை. மெட்ராஸ் ஸிடியில் உள்ள ரோட்டைப் போட ஒண்ணரை கோடி ஒதுக்குகிறோம். அதற்கு மெடல் போட்டு, தார் போட்டு, சிமிண்டு போட்டு உடனே அதை இடிக்கவும் இடிக்கிறோம். இப்படி சென்னை போய்க்கொண்டிருந்தால் இன்னம் மிகமிக மோசமாகப் போய்விடும். நான் நேற்று கோடம்பாக்கம் போய் இருந்தேன். மிகமிக மோசமாக இருக்கிறது. சாக்கடை தண்ணீர் ரோட்டில்தான் போகிறது. துர்நாற்றம் தாங்கவில்லை. சென்னைக்கு என்று ஒரு மாஸ்டர் ப்ளான் போட்டு, ஸ்பெஷல் ஆபீசர் முதலியவர்களை எல்லாம் நியமித்து சர்க்கார் சிடி முனிசிபல் ஆக்ட்டு 41-44 செக்ஷன்படி நடவடிக்கை எடுத்து சர்க்காரே தன் சொந்தப் பொறுப்பில் அவற்றை நிறைவேற்ற வேண்டும். அப்போதுதான் இந்த ஸிடியில் ரோடுகள், சுகாதார வசதிகள் முதலியவை எல்லாம் சிறப்பான முறையில் அமையும். நான் கிராமத்தில் இருந்து வந்தவனானாலும் ஸிடியில் 25 வருஷம் வாழ்ந்தவன் என்ற காரணத்தினால் இதைப்பற்றித் தெரியும். இப்போது இந்த நகரம் விரிந்துவிட்ட காரணத்தினால் இது அழுக்கு நிரம்பி அபாயகரமானதாக ஆகிவிட்டது. கொசு உபத்திரவம் ஜாஸ்தியாகிவிட்டது. தெருவெல்லாம் சாக்கடைத் தண்ணீர் ஓடுகிறது. அங்கங்கே வரிவசூல் பண்ணத்தான் முந்துகிறார்கள். பலவகையிலும் பணம் வாங்கத்தான் துரிதமாக இருக்கிறார்கள். ஆனால் ரோடுகள், சாக்கடைகள் முதலியவை அமைத்துக் கொடுப்பதில் அக்கறை காட்டுவது இல்லை. அதனாலேயே இந்த நகரம் மிகவும் அசுத்தமானதாக, விகாரமானதாகிக்கொண்டிருக்கிறது. ஆகவே இந்த நகரத்திற்காக என்றே உடனடியாக ஒரு மாஸ்டர் ப்ளான் தனியாகப் போட்டாகவேண்டும் என்று வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

இன்னொரு முக்கியமான விஷயத்தைத் சொல்ல ஆசைப்படுகிறேன். காவேரித் தண்ணீரை மெட்ராசுக்குக் கொண்டு வருவது பற்றி அடிக்கடி பேசப்படுகிறது. எந்த இடத்தில் இருந்து கொண்டுவருவதாக இருந்தாலும் நிலங்களுக்குள்ள நீர்ப்பாசன உரிமைகளுக்கு இடைஞ்சல் இல்லாதபடி கொண்டுவருவதானால் ஆட்சேபனை இல்லை. கிருஷ்ணா பெண்ணார் ப்ராஜெக்ட் என்ன ஆயிற்று? அதைப்பற்றிப் பேசினார்கள். ஆந்திரா மைசூருக்கும் பங்கிடுவதைப்பற்றி விசாரணையும் தொடங்கியிருக்கிறது. அந்த ப்ராஜெக்டை நிறைவேற்றுகிறபோது சென்னை நகர குடிதண்ணீரைப் பற்றிமட்டும் சிந்திக்கக் கூடாது. செங்கல்பட்டு ஜில்லாவில் உள்ள ஆறு லட்சம் ஏக்கரா நிலப்பரப்புப் பாசனம் பற்றியும்

10th November 1961] [Sri R. Srinivasa Iyer]

யோசித்து, விவசாயத்திற்குச் சௌகர்யமான முறையில் அதைக் கொண்டுவரவேண்டும். இத்திட்டத்திற்கு நமது பங்கு 34 கோடியாகும் என்கிறார்கள். இதில் ஏதாவது ஒரு பங்காவது இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படவேண்டும்.

தனியாக அக்ரிகல்சரல் என்ஜினியரிங் கோர்ஸ் நம்முடைய ராஜ்யத்தில் எந்த யுனிவர்ஸிடியிலும் கிடையாது. வடநாட்டில் 2 யுனிவர்ஸிடியில் இருக்கிறது. நாம் புதிதாக அக்ரிகல்சரல் காலேஜ் ஏற்படுத்தப் போகிறோம். கோயம்புத்தூரில் ஒரு காலேஜ் இருக்கிறது. நான் ஏற்கனவே மைன்ஸ் அண்டு மெட்டாலர்ஜி என்ஜினியரிங் கோர்ஸ் ஏற்படுத்தவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். அதைப்போலவே இப்போது புதிதாக ஏற்படுத்த இருக்கிற அக்ரிகல்சரல் காலேஜிலாவது இந்த அக்ரிகல்சரல் எஞ்சினியரிங் கோர்சை சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்த விரும்புகிறேன்.

அடுத்தபடியாக மைனர் இர்ரிகேஷன் ப்ரோக்ராம்கீழ் நிறைய தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. செலவும் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் செய்கிற வேலைகளைத் துரிதமாகத்தான் செய்வதில்லை. கனம் அமைச்சர் அவர்கள் இந்த ராஜ்யத்தில் 34 ஆயிரம் ஏரிகள் இருப்பதாகச் சொன்னார். இவற்றில் 24 ஆயிரத்தை பஞ்சாயத்து யூனியன்களிடம் கொடுப்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இவற்றைப் பராமரிக்கப் போதுமான நிதி வசதி அவர்களுக்குக் கிடையாது. ஏற்கனவே கொடுத்துள்ள பணம் ரோடுகள் பராமரிப்புக்கே போதுமானதாக இல்லை. ஆகவே இவ்வினத்தில் அதிகத் தொகை ஒதுக்கித்தரவேண்டும், அவர்களுக்கு.

இன்னொரு விஷயம். இந்த மைனர் இர்ரிகேஷன் திட்டத்தில் கட்டளை வாய்க்கால், புள்ளம்பாடி வாய்க்கால் இவற்றையெல்லாம் நீட்டி, மழை காலத்தில் காவேரியில் அதிக்வெள்ளம் வந்து சேதம் ஏற்படுவதைத் தவிர்க்கும் நடவடிக்கையாகவாவது—காவேரியில் வெள்ளம் அதிகமாக வரும்போது—கிராண்டு அணைக்கட்டு கால்வாயை பழைய பெண்ணாரு ஹெட்டுக்கு கொண்டுபோய் அதிக கண்கள் ஏற்படுத்தி ஜாஸ்தி தண்ணீர் எடுத்து புதுக்கோட்டை, அறந்தாங்கி, பட்டுக்கோட்டை முதலிய பகுதிகளுக்கு அதிகத் தண்ணீர் கொடுக்க வழிசெய்ய வேண்டும். இது ஒரு பெரிய முக்கியமான திட்டம். வெள்ளத் தடுப்புத் திட்டத்தில் அவசியம் இதைச் சேர்த்து காய்ந்துபோன அந்தப் பகுதிகள் வளம்பெற வழி செய்யலாம். நான் இதை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்

அடுத்து நம்முடைய மெட்ராஸ் ஸ்டேட்டிலே இன்னும் சில ஆண்டுகாலங்களிலேயே இப்போது இருக்கும் ரோடு வசதி, ரெயில் வசதி எல்லாம் நம்முடைய உற்பத்திப்பொருள்களை ஏற்றிக் கொண்டு போவதற்கு இல்லாமற்போய் விடும். அடுத்த ஐந்தாண்டு காலத்திற்குள்ளாகவே மவுண்டு ரோடில் கார்கள் க்யூ வரிசையாக நிற்பதற்குக்கூட இடம் இல்லாமல் போய்விடும் என்று ஒரு எக்கனமிகல் ரிவியூ பத்திரிகையில்கூட வந்திருக்கிறது. ஒரு நாளைக்கு 2 கார் வீதம் பதிவு செய்யப்பட்டு வருகிறது என்றால் இதைப் பற்றிக் கொஞ்சம் யோசிக்கத்தான் வேண்டும்.

[Sri R. Srinivasa Iyer] [10th November 1961

(Sri N. S. Ramalingam in the chair.)

ஜனங்களுடைய பிராயணத்திற்கே இடமில்லாமல் போய் விடும். ஆகவே ஜல போக்குவரத்து வசதியைப் **(including waterways)** பெருக்க வேண்டியதும் அவசியம், குறிப் பாக பக்கிங்ஹாம் கனலையும், வேதாரண்யம் கனலையும், ஒன்றுசேர்த்து பிரயாணத்திற்கு சரக்கு போக்குவரத்துக்கும் பவர் போட்டுகள் போகும்படி வசதி செய்ய வேண்டும். வேதாரண்யம் கனலைப்பற்றி ஏற்கனவே ஒரு ரிப்போர்ட் இருக்கிறது. ஆனல் ஒன்று. தஞ்சாவூர் ஜில்லாவின் அபிவிருத்தி எதுவாக இருந்தாலும் புறக்கணிக்கப்படுகிறது. வரி வாங்குவது, மற்ற நிதி வாங்குவது என்றுல் தான் அந்த ஜில்லா கவனிக்கப்படுகிறது. சோழநாட்டின் நெற்களஞ்சியம் என்றெல் லாம் சொல்லப்பட்ட பெருமை போய்விட்டது. இன்றைக்கு செங்கல்பட்டு, தென்ஹுற்காடு, வடாற்காடு இவைதான் முன்னணி யில் இருக்கின்றன. கொஞ்சம் தஞ்சை ஜில்லாவிற்கும் வசதி செய்துதரவேண்டும் என்று கருதினல் இந்த வேதாரண்யம் கனலை ஆழப்படுத்தி, பக்கிங்ஹாம் கனலோடு சேர்த்துவிட்டால் போதும், மோட்டார் போட்டு போய்வருவதற்கு மிகவும் உதவியாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அதேநேரத்தில் ஒரு சிறிய யோசனை. நான் பெரிய என்ஜி னியர் அல்ல. ஆனலும் ஒரு ரிடையர்ட் என்ஜினியர் அவர்களோடு பேசிக்கொண்டிருந்த போது மிகவும் நல்லதொரு திட்டம் என்று அவரே ஒப்புக்கொண்ட ஒன்றை சர்க்காருக்கு தெரிவிக்க விரும்பு கிறேன். கூவம் ஆற்றையே தூத்துவிட்டு அங்கெல்லாம் பார்க், ப்ளே க்ரவுண்டு, வீடுகள் என்று கட்டிவிடலாம்; நகரத்திற்குள் அதனல் நிறைய இடம் கிடைக்கும். அந்தக் கூவம் ஆற்றையே அடைத்து சைதாப்பேட்டைக்கு மேற்கே அடையாற்றிலே விட்டு விடலாம். இதை ஆராய்ச்சி செய்யவேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து கால்நடை சம்பந்தமாகவும், கோழிப்பண்ணை சம்பந்த மாகவும் எனக்கு முன் நண்பர்கள் பேசினர்கள். நமக்கு வெடர்னரி காலேஜ் போதாது. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கால் நடைப் பண்ணை ஏற்படுத்துவதை நான் வரவேற்கிறேன். ஆனல் கால்நடைத் துறையில் இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகள், மருத்து வர்கள் நமக்குப் போதாது. வெடர்னரி காலேஜ் எந்த ஜில்லாவில் ஏற்படுத்தவேண்டும் என்பது அல்ல இப்போது பிரச்சினை. எந்த ஜில்லாவில் ஏற்படுத்தினலும் சரி, உடனடியாக போஸ்ட் கிராஜு வேட் கோர்சோடு கூட மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத் திலேயே நம் ராஜ்யத்தில் உடனடியாக ஏற்படுத்தவேண்டியது அவசியம். இவ்வளவுக்கும் பணம் போதுமா, போதாதா என்று பரிசீலிக்கவில்லை. இருப்பதை நிரவலாம். அல்லது இந்த ஒவ் வொரு திட்டத்திற்கும் டோக்கன் கிராண்டாவது ஒதுக்க வேண் டும் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

10th November 1961]

SRI N. S. RAMALINGAM (Temporary Chairman) : I fix a time limit of fifteen minutes for each hon. Member.

* SRIMATHI A. SUARES : Mr. Chairman, Sir, it is a well known fact that the Madras State is one of the most advanced States in the country as far as education goes. Even without a Five-Year Plan considerable progress has been made in this sphere from year to year. The outlay in the three plans shows an increase from 493.86 lakhs in the First Plan to 1,141.41 in the Second Plan and 2,564.99 in the Third Plan. Nearly, threefourths of the total plan outlays have been on Primary Education. During the last 10 years, the number of elementary schools has increased from 15,800 to 27,000 and the number of elementary school children from 18.3 lakhs to 33 lakhs.

The emphasis placed on Primary Education is necessary for, the primary stage is the foundation of the whole structure of education. With the introduction of compulsory primary education, it will be possible to enrol all children in the age group 6 to 11 by the end of the Third Plan period in the elementary schools. This large enrolment is made possible by the mid-day meal scheme where food is given to poor children. In the Third Plan Period it is proposed to spend 211 lakhs on the midday meal programme. It is not enough if every child in the age group 6 to 11 is enrolled in the Elementary Schools. The quality of teaching, regular attendance, the sincerity of the teachers, the goal to make the children permanently literate are some of the essential factors that have to be borne in mind. Only qualified trained teachers should be employed in the Elementary Schools. If the teachers were trained long ago and have run into a rut, refresher courses should be provided for them. They should visit Training Schools, exhibitions of teaching aids and children's work in other schools. Suitable school buildings that will give the right atmosphere, modern equipment, open spaces for school gardens and play grounds should also be provided.

In addition to this, much depends on the choice of inspecting officers, who will control and inspect the elementary schools. Besides the annual inspection, there should be surprise visits, Village teachers often absent themselves on some pretext or other and it is not an uncommon occurrence that a surprise visit reveals an empty school building with no signs of school children or staff. Inspecting Officer should be kept in a place for a continuous period of at least three years so that they could guide and watch the progress made by the school. Frequent changes of Inspecting Officers will not make any progress.

In addition to this, the Secondary Schools have increased from 637 in 1950–51 to 1231 in 1960–61. But the enrolment in the age group 14–17 is now only 10.9 per cent of the total number in this age group. It is proposed to enrol 75,000 pupils more in the Secondary School stage. Stimulus to enrolment will be given by

[Srimathi A. Suares] [10th November 1961

the extension of free education to all poor children in the High School stage. If this concession is largely availed of, there will be great improvement within the next five years.

The system of education in the State was re-organised in the year 1958. Instead of three stages viz., primary, middle and high there are only two stages now viz., an elementary course of seven years duration and a higher secondary course of 4 years duration. There will be public examination at the end of the 10th and 11th years. This pattern is likely to be changed according to reports in the newspapers. The starting of the Higher Secondary class or the XI standard is to be postponed for the present. This will mean that in High Schools there will be only 10 standards and pupils admitted at the age of five plus will complete the High School course at the age of 15 plus. Out of about 80,000 pupils who appear for the S.S.L.C. and High School examinations perhaps less than 30 per cent who secure eligibility for college education go in for higher studies. The remaining 70 per cent have to start a career with the S.S.L.C. certificate. Passing out at the age of 15 plus will be a great disadvantage. No one will employ the candidates at such an immature age. Completing the high school course in ten years may also be a disadvantage, for the advanced syllabus for each class may not be assimilated by the pupils. If the Higher Secondary Class is not to be opened in High Schools, it may be desirable to go back to the 11 year course of secondary education which will give a higher standard not only to those who go out to work after the S.S.L.C. course but also to the large numbers that will be required to undergo teachers' traing to man the increased number of schools in the Third Plan Period. About 31,000 additional teachers would be required to man the new schools that would be opened.

Under ' Medical ', the Third Plan provides for buildings for better and newer hospitals, more equipment and higher salaries for medical personnel. Medical facilities will reach the villages through Primary Health Centres. To make such postings attractive higher emoluments and residential accommodation have been offered. In spite of this, the department will find it difficult to find sufficient doctors who will serve in the villages for amenities in rural areas are still lacking. Efforts should be made to provide better housing, electricity, sanitation, good roads, education facilities, etc. If these are provided perhaps more doctors will serve in Primary Health Centres.

One of the achievements of the first two plans is the remarkable increase in the number of additional beds. In the first plan the figure was 1,300, in the Second Plan the figure was 5,200 and the Third plan proposes to have 5,250 which gives a total of 11,750 for the three plans. This is over and above the existing bed strength. An increase in the bed strength implies an increase in the number of doctors, head nurses, nurses, midwives, ward boys, etc. Unless the additional staff is sanctioned and appointed progress will be

retarded. In most hospitals the sanctioned staff work for a much higher figure than the sanctioned bed strength. When expansion takes places this over work should be relieved

Under the head ' Technical Education ' in the Third plan, provision for a large number of projects has been made. The projects started under the Second plan will be maintained and expanded with further grants-in-aid. In the Central Polytechnic in Madras, there is a proposal to put up new buildings in an area of 100 acres. The Nilgiris will have a new Polytechnic. What is most significant is, three technical institutions for women are to be started in the Third Plan period. This is a great step forward and I am sure when women technicians are trained, they will acquit themselves creditably.

10-30 a.m.

With the introduction of diversified courses in High Schools, it will be possible to select pupils with a technical bent and if the boys are encouraged to join these technical courses, there will be a large number of technicians to work in this State when industrialisation is well-established. There will also be Junior Technical Schools for Boys who have studied up to the 8th Standard.

The cost of the State Third Plan is Rs. 291 crores. Besides this, there are plans that will be implemented directly by the Central Government in the form of new Steel Mills, new Railway Lines, Harbours, exploitation of mineral resources, etc. With the investment of such large sums of money on the various developmental activities in the country, there is bound to be more food, more opportunities for work, higher standard of living and gradual eradication of poverty.

I wish the Third Plan every success. Thank you.

* **Srimathi SATHIYAVANIMUTHU** : தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருக்கையில், அனைவருக்கும் இருக்கின்ற குறைகளை எடுத்துச்சொல்ல இதில் உரிமை உண்டு என்றும், அந்தக் குறைகளை எல்லாம் ஓரளவுக்கு பரிசிலனை செய்து ஆளுகிற கட்சி ஏற்றுக்கொள்ள முடியும் என்றும் இந்த மன்றத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் உறுதி அளித்திருக்கிறார்கள். நாட்டின் நலனைக் கருதி, நாடு முன்னேற வேண்டுமானால், படிப்படியான திட்டங்களை உருவாக்கி அதனை செயல்படுத்தி நன்மைகளை காணு வதின் மூலமாகத்தான் நாடு முன்னேற முடியும் என்பதை நாங்கள் எப்போதுமே எதிர்த்தது கிடையாது. பஞ்சாயத்து ஆட்சியின் மூலம் அதிகாரத்தை பரவலாக்கி பகிர்ந்து அளித்து அதன் மூலம் திட்டங்கள் ஒழுங்காக நடக்கின்றனவா, ஊழல்கள் இல்லாமல் செயல்படுத்தப்படுகின்றனவா என்பதை பார்த்து, அதன் மூலம் நல்லமுறையில் திட்டங்களை நிறைவேற்ற முடியும் என்ற நல்லெண் ணத்துடன் பஞ்சாயத்துக்களை அமைத்து நாம் அதை அமுல் நடத்திக்கொண்டிருக்கிறோம். அதிலும் எங்களுக்கு எந்தவித மான குறையும் கிடையாது. ஆனால் செயலாற்றுவதில் ஏற்படுகிற குறைகளை நாங்கள் அவ்வப்போது சுட்டிக்காட்டுகிறோம். போதுத்

[Srimathi Sathiyavanimuthu] [10th November 1961

துறையில் சில சாதனைகளையும் தனியார் துறையில் சில சாதனை களையும் இரண்டும் சேர்ந்து செய்தால்தான் பெருவாரியான நன்மைகளை நாடு பெற முடியும் என்பதை சர்க்கார் தங்கள் கொள்கையாக வகுத்திருக்கிறது. இது எந்த அளவுக்கு வெற்றி பெறும் அல்லது எந்த அளவுக்கு வெற்றி பெறாது என்பதை நாங்கள் பல முறை இங்கு சுட்டிக்காட்டி கேலிக்குரிய முறையில் கூட இதைப்பற்றி எடுத்துக்காட்டியிருக்கிறோம். அதனை சர்க்கார் இதுவரை பரிலசீனை செய்ததாகத் தெரியவில்லை. மின்சாரம், நல்ல கனிப்பொருட்கள் இவைகளை எல்லாம் பொதுத்துறையில் வைத்துக்கொண்டு, அவைகளை பயன்படுத்துகின்ற தொழிலை தனி யார் துறையிலும் ஒதுக்குவதன் மூலமாகத்தான் நல்ல வெற்றி காண முடியும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். ரஷ்யா போன்ற நாடுகளில் எல்லோமே பொதுத்துறையில் நடக் கிறது என்றிருந்தாலும் கூட, நாங்கள் பொதுத்துறையும் தேவை, தனியார் துறையும் தேவை என்றுதான் கொள்கையாக வைத்துக் கொண்டிருக்கிறோம் என்பதை அமைச்சர் அவர்கள் ஒத்துக் கொண்டார்கள். பொதுத்துறையில் நடக்கின்ற குறைகளை இந்த சட்டமன்றமோ அல்லது பாராளுமன்றமோ அல்லது ஊராட்சி அல்லது பேராட்சி மன்றங்களோ அதைப்பற்றி சொல்லுவதற்கும் அதைப்பற்றி விவாதிப்பதற்கும் உரிமை இருக்கிறது. தனியார் துறையில் பல குறைகள் ஏற்பட்டு அதன் மூலம் ஏழைகள் கஷ்டப் படக்கூடிய நிலை ஏற்பட்டு, அதன் காரணமாக கோடிக்கணக்கான ரூபாய் லாபமாகப் பெற்றாலும் கூட, அவர்களது கணக்கை இந்த மன்றமோ அல்லது வேறு பொது மன்றங்களோ பரிசிலனை செய் வதற்கு உரிமை கிடையாது. அந்த அளவில் ஆளுகிற கட்சி தனி யார் தொழிலகங்களுக்கு உரிமை அளித்திருக்கிறது. அவர்கள் செய்து வருகின்ற ஊழல்களையோ அல்லது அவர்களது வரவு செலவுகளைப்பற்றியோ ஆளுகிற கட்சியோ அல்லது எதிர்க் கட்சியோ பரிசீலனை செய்ய முடியாது. அந்தக் காரணத்தினால் தான் அப்பேர்ப்பட்ட தனியார் துறையிலுள்ள பெரிய முதலாளி கள் ஆளுகிற கட்சிக்கு மட்டும் கட்டுப்பட்டால் போதும் என்ற நிலையிலும், ஆளுகிற கட்சிக்கு மட்டும் பதில் சொன்னால் போதும் என்ற அளவிலும் இருந்து கொண்டிருக்கிறது. மேலும் அந்த நிலை ஏற்படத்தான் செய்யும். ஏற்பட்டும் வருகிறது. இதை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு ஆளுகிற கட்சி தேர்தலுக்காக தனி யார் துறையிலுள்ள பெரும் முதலாளிகளை அணுகி நிதி கேட்பதற் கான சபலம் ஏற்படுகிறது. அதனால் தனிப்பட்ட துறையிலுள்ள முதலாளிகளுக்கும் ஓரளவுக்கு பலம் ஏற்படுகிறது. ஏற்கனவே இதைப்பற்றி பல முறை குற்றஞ்சாட்டுகின்ற முறையில் நாங்கள் எடுத்துக் காட்டியிருக்கிறோம். அதிகமான லாபத்தை கொடுக்கும், அதிகமான அளவில் பணமுதலைகளை சிருஷ்டிக்கும் தொழில்களாக இருக்கின்ற பஸ், சினிமா போன்ற தொழில்களை தேசியமயமாக்க வேண்டும் என்ற இந்த சட்டமன்றத்தில் நாங்கள் பல முறை தீர் மானங்களை கொண்டு வந்திருக்கிறோம், ஆனால் அவைகளை எல்லாம் ஆளும் கட்சி தங்களுக்கு இருக்கின்ற பலத்தைக்கொண்டு அந்த நல்ல தீர்மானங்கள் எல்லாம் தோற்கடிக்கப்பட்டிருக்கின்றன.

10th November 1961] [Srimathi Sathiyavanimuthu]

இவைகளை எல்லாம் தேசீயமயமாக்கினால் 1,000 கோடி அல்ல, 2,000 கோடி வரையிலும் இந்த மாநிலத்திற்கு செலவு செய்ய முடியும் என்கின்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. தனியார் துறைக்கு சலுக்கை காட்டவேண்டும் என்ற நோக்கத்துடன் அதிகமான அளவில் பொதுதுறை தேவையில்லை என்கின்ற ஒரு கொள்கையை வகுத்துக்கொண்டு, அந்த வழியில்தான் நாங்கள் செல்வோம், அதற்கு நீங்கள் அனைவரும் ஒத்துழைப்பு தரவேண்டும், இருக்கின்ற திட்டம் 200 கோடியாக இருந்தாலும் சரி, 100 கோடியாக இருந்தாலும், அல்லது 5 கோடியாக இருந்தாலும் சரி அதை வைத்துக்கொண்டு தீட்டுகிற திட்டத்தை எதிர்கட்சிகள் அனைத்தும் ஆதரிக்கவேண்டும். அதை செயல்படுத்துவதற்கு ஒத்துழைப்பு தரவேண்டும் என்று சொன்னால் அது எந்த அளவுக்கு சாத்தியமானது என்பதை சர்க்கார் அறியவேண்டும். தனியார் துறையில் இருப்பவர்களும் தவறுகளை செய்கின்றார்கள் என்றும் ஆனால் அவர்களை கேட்பது முடியாத காரியம் என்றும், நேற்று கூட நமது நிதி அமைச்சர் அவர்கள் இங்கு தெரிவித்தார்கள். தனியார் துறையில் ஏற்படும் குறைகளை எடுத்துச்சொல்ல முடியுமா முடியாதா என்கின்ற நிலைமையை ஆட்சிபீடத்திலிருக்கின்றவர்கள் சிந்தித்துப்பார்த்து நடவடிக்கை எடுத்தால் அதைப் பற்றி பரிசீலனை செய்வதற்கு வழி செய்ய முடியும். எனவேதான் அவர்கள் செய்கின்ற குறைகளையும் ஆட்சி மன்றங்கள், பொது மக்களின் பிரதிநிதிகள் அடங்கியிருக்கின்ற மன்றங்கள் பரிசீலனை செய்வதற்கு வழிவகை செய்தால்தான் பொதுத் துறைகளிலும் தனியார் துறைகளிலும் இருக்கின்ற குறைகளை, குற்றங் குறைகளை எடுத்துச் சொல்ல முடியும், அதன் மூலமாக குறைகளையும் நீக்கு வதற்கு நடவடிக்கை எடுக்கமுடியும் என்பதை இந்த மன்றத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று, இப்படி ஒதுக்கி வைத்திருக்கின்ற பணத்தில், இந்தத் திட்டத்தில் பிற்பட்ட சமுதாயத்தின் நலனுக்காக ஒதுக்கியுள்ள தொகை மிகக் குறைவாக இருக்கிறது என்பதை எங்களால் காண முடிகிறது. அதற்கான விளக்கங்களை கேள்வி நேரத்தில் மதிப்பிற்குரிய அங்கத்தினர் திரு. எஸ். எம். அன்னமலை அவர்கள் கேட்ட கேள்வி ஒன்றுக்கு பதில் அளிக்கும் வகையில் அமைச்சர் அவர்கள் விளக்கமான பதிலை இந்த மன்றத்தில் சமர்ப்பித்திருக்கிறார்கள். அந்த விளக்கத்தில் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும், மத்திய சர்க்கார் தருகிற பணத்திலிருந்து ஒதுக்கும்போது அதிகப்படியாக இருக்கும் என்று அந்தப் பதிலில் அழகாக சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். இருந்தாலும் அகில இந்தியாவில் இருக்கின்ற பிற மாநிலங்களில், இரண்டாவது திட்டத்தை விட மூன்றாவது திட்டத்திற்கு அதிகப்படியாக பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் இந்த மாநிலத்தில், ஏழைகளை எல்லாம் இந்த சர்க்கார்தான் கோடீசுவரர்களாக்கி வைத்திருக்கிறது என்றும், இந்த சர்க்கார் ஏழை மக்களை எல்லாம் பட்டதாரிகளாக்கியிருக்கிறது என்றும், இந்த சர்க்கார்தான் ஏழை மக்களுக்கு மாட மாளிகைகளை கட்டித் தந்திருக்கிறது என்றும்

[Srimathi Sathiyavanimuthu] [10th November 1961

பலவிதத்தில் மக்களிடத்தில் பிரச்சாரம் செய்யும் இந்தச் சர்க்கார் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு மிகவும் குறைவான தொகையைத்தான் பெற்றிருக்கிறது. அதை என்னுல் சுட்டிக் காட்ட முடியும். ஆந்திரப் பிரதேசத்தில் இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் 461 லட்சம் என்றுல் இப்போது மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 537 லட்சம் ஒதுக்கியிருக்கிறுர்கள். அஸ்ஸாமில் இரண்டாவது திட்டத்தில் 824 லட்சம் என்றுல் இப் போது மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 1,030 லட்சம் ஒதுக்கியிருக்கிறுர்கள். பீஹாரில் இரண்டாவது திட்டத்தில் 434 லட்சம் என்றுல், மூன்றுவது திட்டத்தில் 728 லட்சம் ஒதுக்கியிருக் கிறுர்கள். குஜராத்தில் 295 லட்சமாக இருந்தது இப்போது 305 லட்சமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. மஹாராஷ்டிரத்தில் 530 லட்சமாக இருந்தது இப்போது மூன்றுவது திட்டத்தில் 778 லட்ச மாக ஆகியிருக்கிறது. மத்தியப் பிரதேசத்தில் 269 லட்சத் திலிருந்து எதிர்பார்க்க முடியாத அளவுக்கு, யாரும் ஆச்சரியப் படக்கூடிய அளவில் 800 லட்சம் அதிகப்படியாக உயர்த்தியிருக் கிறுர்கள். மைசூரில் 279 லட்சமாக இருந்தது 400 லட்சத்திற்கும் அதிகமாக ஆக்கப்பட்டிருக்கிறது. ஒரிஸாவில் 341 லட்சத்தி லிருந்து 361 லட்சமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனுல் பரிதா பத்திற்குரிய நம் தமிழ் மாநிலத்தில் பிற்பட்ட சமுதாய மக்களுக் காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 459 லட்சம் ஒதுக்கப் பட்டிருந்தது. இப்போது 326 லட்சமாக மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறைக்கப்பட்டிருக்கிறது. இது ஏட்டளவில் திட்டம் மூலமாக செலவழிக்கப்படும் தொகையாக இருந்தாலும் திட்டம் அல்லாமல் நான்-ப்ளான் தலைப்பின் கீழ் வருஷம் ஒன்றுக்கு 3 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறோம், ஆக ஐந்து வருஷத்தில் 15 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறோம், திட்டமில்லாமல் 15 கோடி ரூபாய் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செலவழித்ததைப் போல, திட்டத்தில் இல்லாமல் மேலும் வருஷத்திற்கு 4 கோடி ரூபாய் என்று ஐந்து ஆண்டுகளுக்கு 20 கோடி ரூபாய் செலவழிக்க முடியும் என்ற உறுதியைக் கூட கேள்வி நேரத்தில் தந்திருக்கிறுர் கள். இந்த அளவுக்கு செயலாற்ற முடியுமோ என்று கூட அஞ்ச வேண்டியதாக இருக்கிறது. ஒதுக்கிய தொகையை இப்போது செலவழிப்பதிலும் பல தவறுகள் ஏற்படுகிறது, செலவழிக்கப் படுகிறது என்று சொல்லிவிட்டு அந்த மக்களை ஏமாற்றி வேறு ஏதாவது திட்டங்கள் நிறைவேற்றப்படுகிறதோ என்று கூட அஞ்ச முடிகிறது. உதாரணத்திற்கு ஒன்று சொல்லவேண்டுமானுல் எனது தொகுதியில் இரண்டாவது திட்டத்தில் ஆதித் திராவிட மக்கள் வாழுகின்ற கிரே நகர் பள்ளம் என்று ஒன்று உண்டு, அந்தப் பகுதி யில் இருக்கிற, ஏழை மக்கள் வாழுகின்ற குடிசைகளை அப்புறப் படுத்தி, சீர்வரிசையாக எல்லா வசதிகளையும் செய்து தரவேண்டு மென்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதைச் சேர்த்து அந்தத் திட்டமே முடிந்து, மூன்றுவது திட்டத்தைப் பற்றிப் பேசிக்கொள்ளுகின்ற இந்த நேரம் வரையிலும் இந்த கிரே நகர் பள்ளம் பகுதி இன்னும் நிறைவேற்றப்படாமல் இருக்கிறது.

10th November 1961] [Srimathi Sathiyavanimuthu]

இதே போல ஏழை மக்களுக்கும், பிற்படுத்தப்பட்ட மக்களுக்கும் சர்க்கார் ஸ்காலர்ஷிப்—உபகாரச் சம்பளம்—கொடுக்கிறோம் என்று சொல்லும்போது, உணவு, விடுதிகளில் தங்குவதற்கு என்ன சலுகை கொடுக்கப்படுகிறது என்று விளக்கமாக, தெளிவாக இன்று காலை விவரங்களைத் தந்திருக்கிறார்கள். இவைகளிலே பார்க்கும்போது மிக அதிகப்படியான பணம் ஒதுக்கியிருப்பதாகக் காட்டப்படுகிறதே தவிர, ஒவ்வொரு கல்லூரியிலேயும், ஒவ்வொரு விடுதியிலேயும் உண்மையிலேயே மாணவர்கள், இப்போது திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகையின்றி திட்டமில்லாமல் நான்-ப்ளான் தலைப்பின்கீழ் அதிகப்படியான கோடிக்கணக்கான பணம் ஒதுக்கி, பெரிய சலுகைகளைப் பெற்று மாணவர்கள் நல்ல முறையில் படிக்கிறார்களா என்று கேட்டால் இல்லை. சமீபத்திலே, இந்த ஆட்சி மன்றத்தில் இருக்கும் அத்தனை பேர்களுக்கும் தெரியும், எம். ஸி. ராஜா ஹாஸ்டலில் மாணவர்கள் உண்ணாவிரதம் இருந்தார்கள். காரணத்தை அவர்கள் எடுத்துச் சொல்லும்போது, அது வேதனைக்குரிய ஒரு சம்பவம், போடுகிற சோறே கைக்குத்தல் அரிசி; பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு சர்க்கார் தருகின்ற சலுகையாதலால், சர்க்கார் சலுகையினால் பயன் அடைகின்ற மக்கள் தானே என்ற எண்ணம் இயற்கையாகவே தோன்றுகிறது. கைக்குத்தல் அரிசியாக இருந்தாலும் பரவாயில்லை சத்து அதிகம் உள்ள உணவு என்று மாணவர்கள் இருந்து விடலாம், ஆனால் தரப்படுகிற குழம்பு வகைகள்—சாம்பார்—இரண்டே இரண்டு கரண்டி. 20-25 வயது மாணவன் ஆழாக்கு அரிசி சாப்பிடுகின்றவனானாலும் கூட இரண்டு கரண்டிக்கு மேல் கேட்டால், வீட்டில் இப்படித்தான் சாப்பிட்டாயோ, விடுதியில் இருக்கக்கூடாது, நீ படிக்க வேண்டியதில்லை என்று அதிகாரிகள் கூறுகிறார்கள். அமைச்சரிடத்தில் முறையிட்டாலோ நீங்கள் சாம்பார் சோறு சாப்பிட்டு படித்து பட்டம் பெறுவதில் பெருமைஅடையவேண்டும். இரண்டு கரண்டிக்கு மேல் ஏன் வேண்டும் என்று அவர்களிடத்தில் கேட்கப்படுகிறது. இப்படி மாணவர்களை அதிகாரிகளும் மந்திரிகளும் மனக் கொதிப்பு அடையக்கூடிய அளவுக்கு, வேதனை படக்கூடிய அளவுக்கு பேசுகிறார்களென்றால் ஒதுக்கிய பணம் என்ன ஆனது? நோய் வாய்ப் பட்டால் 12 அணா அளவுக்கு மருத்துவ விதிப்படி உணவு கொள்ளலாம் என்று இருக்கிறது, ஆனால் இப்போது 12 அணா கொடுப்பது கிடையாது. பொறியியல் கல்லூரியில் படிக்கின்ற மாணவர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு 960 ரூபாய் உபகாரச் சம்பளமாகக் கொடுத்துவந்ததை இப்போது 840 ரூபாயாகக் குறைக்கப் பட்டிருக்கிறது. இந்தக் குறைகளையெல்லாம் எடுத்துச் சொல்லி இந்த உண்ணாவிரதம் இருந்ததற்காக பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு கலைக் கல்லூரி மாணவன் இப்போது விடுதியிலிருந்து நீக்கி வைக்கப்பட்டிருக்கிறான். காரணம் என்னவென்று கேட்டால் உண்ணாவிரதம் செய்கிற அளவுக்குத் தூண்டி விட்டானாம். சாம்பார் இரண்டு கரண்டி போதாது என்று சொன்னதற்கு மாணவன் விடுதியிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறான். இன்னமும் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. இங்கே கோடி கோடியாக, 5 கோடி, 7 கோடி, 20 கோடி, 50 கோடி என்று செலவழிக்கிறோம்

[Srimathi Sathiyavanimuthu] [10th November 1961

என்று சொன்னால், அந்தப் பணம் எங்கே செல்லுகிறது? எனவே திட்டங்களைப் போட்டு எழுத்தினால் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு மூக்கின் மேல் விரலை வைத்து ஆச்சரியப்படும் அளவுக்குப் போட்டு விட்டால், நேற்றைய தினம் கனம் அன்பழகன் அவர்கள் சொன்னது போல கோடி கோடியாகப் போட்டது என்னவாயிற்று என்றால் தனுஷ்கோடியாகத்தான் இருக்கும். கோடி கோடியாக ஒதுக்கும் பணம் ஏழை, தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் போய்ச் சேரவில்லையென்றால் ஒதுக்குகின்ற பணம் என்ன ஆகிறது? பணத்தை ஏன் ஒழுங்காகச் செலவழிக்கக் கூடாது? கனம் தலைவர் அவர்கள் மணி அடித்து விட்ட காரணத்தினால் ஒரே ஒரு கருத்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன்—அதுவும் எனது தொகுதியைச் சேர்ந்த காரணத்தினால். தொழில் அபிவிருத்தி என்று சொல்லும் போது, தொழிற்சாலைகளை அதிகமாக ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லும்போது, மத்திய சர்க்கார் பெரம்பூரில் கோச் பாக்டரி கட்டியதையும், நெய்வேலியில் நிலக்கரி தோண்டி எடுப்பதையும் ஆட்சிபீடத்தில் இருப்பவர்கள் சொல்லிக்கொள்வது வாடிக்கையாகி விட்டது. அழகிய போஸ்டர் மூலம் தீப்பெட்டி, தீப்பெட்டி, சுடர் தீப்பெட்டி என்றும், மாலு காலணி என்றும் மாநில அரசு ஏற்படுத்துகின்ற தொழிற்சாலைகள் என்று காட்டினார்கள். தீப்பெட்டித் தொழிற்சாலை எனது தொகுதியில் ஏற்பட்டதற்கு ஆளுகின்ற கட்சியைச் சேர்ந்தவர் ஒருவர் கூட அவர்கள் தொகுதியில் கோச் பாக்டரி மாச் பாக்டரி இருக்கிறது, ஆனால் எனது தொகுதியில் அண்டா தொழிற்சாலை கூடக் கிடையாது. குண்டா தொழிற்சாலை கூட கிடையாது என்று பேசினார்கள். இன்றைக்கு அந்த தீப்பெட்டி தொழிற்சாலை மூடப்பட்டிருக்கிறது. காரணம் என்ன? ஏன் மூடவேண்டும்? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம்பிக்கப்பட்டு திட்டம் முடிவதற்கு முன்னரே இது மூடப்பட்டிருக்கிறது. எதற்காக இதைச் சொல்லுகிறேன் என்றால் விளம்பரப்படுத்தப்பட்டது இது சர்க்காரின் மகத்தான சாதனை என்று. எந்த பொருள் காட்சி சாலையிலும் சுடர் தீப்பெட்டி வாங்கவேண்டும் என்று விளம்பரப்படுத்தப்படுகிறது. இந்தத் தொழிற்சாலை ஏன் மூடப்பட்டது? இப்படி அதிகப்படியான பணத்தைச் செலவழித்து வெற்றி காண முடிகிறதா என்று பார்த்தால், வெற்றி காண முடியவில்லை. எனவே சொல்லுகிறேன், திட்டங்களைத் தீட்டி, புள்ளிவிவரங்களைக் காட்டி, கோடி கோடி என்று எழுத்தில் எழுதிக் காட்டி மந்திரிகளாக இருக்கிறவர்கள் எங்களை ஏமாற்றவேண்டாம். இதனை வைத்து தேர்தல் காலத்தில் ஓட்டு வாங்க எண்ணினால், இந்தத் திட்டத்தை எடுத்துக் காட்டினால் அதிலுள்ள குறைகளை மக்கள் அறிவார்கள், அதனால் நீங்கள் வெற்றி பெற முடியாது. மக்களை அணுகும் முன்னால் குறைகளை நீக்கும் முயற்சியில் ஈடுபட்டால் இதைக் காட்டி நீங்கள் ஓட்டுப் பெற முடியும் என்று கூறி எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri J. MATHA GOWDER**: தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நான் ஆமோதித்து ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள்

போட்டு திட்டங்கள் வெற்றிகரமாக நடைபெற்றிருக்கின்றன என்பதைப்பற்றி மக்கள் அறிவார்கள். அரசியல் கட்சிகள் ஒருக் கால் திட்டத்தைப் போட்டு மக்களை ஏமாற்றுகிறார்கள் அல்லது தங்களை ஏமாற்றுகிறார்கள் என்று சொல்லி விடலாம். ஆனால் அடுத்த தேர்தல் நெருங்குகிறது. 62-வது வருஷம் பிப்ரவரி மாதத் திலே பொதுத் தேர்தல் வருகிறது. பொதுத் தேர்தலிலே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வைத்து எங்கே நாம் வெற்றி பெற்றுவிடப் போகிறோமோ என்று எதிர்க்கட்சிக்காரர்கள் பயப் படுகிறார்கள். பொதுத் தேர்தல் சமயத்திலே இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வருவதைக் கண்டு அவர்கள் பயப்படுவது இயற்கையே. ஏன் பயப்படுகிறார்கள்? இந்தத் திட்டத்தை பொதுமக்கள் நன்றாக புரிந்து கொண்டால், அடுத்த தேர்தலிலே நாம் இந்தச் சபைக்கு வர முடியுமோ, முடியாதோ என்ற நிலைமை அவர்களுக்கு ஏற்பட்டிருப்பதே யாகும். ஆகவே தான் நண்பர் ஸ்ரீ. சின்னதுரை அவர்கள் சொன்னார்கள், இந்தத் திட்டத்தை காங்கிரஸ்காரர்கள் மட்டும் உருவாக்கவில்லை. பல கட்சியினரும் சேர்ந்து இந்தத் திட்டத்தை உருவாக்கி இருக்கிறோம் என்று சொன்னார்கள். திட்டம் நல்ல முறையிலே இருப்பதை உணர்ந்து தான் நாங்களும் சேர்ந்து இந்தத் திட்டத்தை உருவாக்கி இருக் கிறோம் என்று சொல்லி, மக்களிடத்திலே அவர்களும் இதுபற்றி பிரசாரம் செய்வதற்கு சொல்கிறார்கள். இதை நாம் கூர்ந்து கவனிக்கும்போது இந்தத் திட்டத்தில் பல நன்மைகள் அமைந் திருக்கிறது தெரியும். இதை மக்கள் நன்றாகப் புரிந்து கொண் டார்கள். மக்களிடத்தில் இனிமேல் எதிர்க்கட்சிக்காரர்கள் பித்த லாட்டம் சொல்லி அவர்களை ஏமாற்றுவதற்கு முடியாது.

SRI A. GOVINDASAMI: On a point of order, Sir. இந்தச் சபையில் பித்தலாட்டம் என்ற வார்த்தை உபயோகிக்கலாமா?

TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM): பித்தலாட்டம் என்பது சட்டசபைக்கு ஒவ்வாத வார்த்தையல்ல. ஆனால் அந்த வார்த்தையை உபயோகிக்க வேண்டாமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

SRI J. MATHA GOWDER: எதிர்க்கட்சியைச் சார்ந்தவர்கள் ஊழல் என்று பேசுகிறார்கள். அதை மட்டும் இங்கே பேசலாம் என்று அவர்களுக்குத் தெரிகிறது. ஆனால் நான் பித்தலாட்டம் என்று சொல்லும்போது மட்டும், அந்த வார்த்தையை உபயோகிக்க லாமா என்றும், அது முறையா என்று கேட்கிறார்கள். கேட்கட்டும். அவர்களுக்கு அப்படித்தான் பேசத் தெரியும். அதுவும் அவ்வளவு உசிதமல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI: Sir, I did not hear your ruling on the point of order raised by the hon. Member, Sri Govindasami.

TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM): I think it is neither objectionable nor unparliamentary. However I requested the hon. Member, Sri Matha Gowder, not to use that word.

[10th November 1961

SRI C. N. ANNADURAI : But he is repeating it.

SRI J. MATHA GOWDER : Sir, I never repeated it.

அவர்கள் ஊழல் என்று சொல்லும்போது, நாம் பித்த லாட்டம் என்று சொல்லுவது தப்பில்லை என்பதைத்தான் எடுத்து காட்டினேன். நான் சேர்மன் ரூலிங்குக்கு அப்பாற்பட்டு பேச வில்லை. நான் அப்படிப் பேசுவதற்கும் தயாராக இல்லை. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாக்கப்படும்போது, எல்லாக் கட்சியைச் சார்ந்தவர்களும் இந்தத் திட்டத்தைப் போட் டார்கள் என்று சர்க்கார் சொல்லும்போது, ஒரு சாரார் மட்டும் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாக்கப்படும் போது இதிலே கலந்து கொள்ளவில்லை. அந்தக் கட்சியின் தலைவர் அதிலே கலந்து கொள்ளாதபோது, இங்கே எப்படிக் குறையை மட்டும் அவர்கள் பேச முடியுமென்பதுதான் எனக்குப் புரியவில்லை. திட்டத்தைத் தயாரிக்கும்போது, அந்தக் கட்சியின் தலைவர் அங்கு வந்திருந்து திட்டம் போடக்கூடிய நேரத்திலே அதிலே உள்ள குறைகளை எடுத்துச் சொல்லி இருந்தால் பரவாயில்லை. அப்படி வராமல் குறை இருக்கிறது என்று மட்டும் சொல்கிருர்கள். ஒன்று சொல்ல விரும்புகிறேன். இவர்கள் அடுத்தத் தேர்தலிலே இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை வைத்து மக்களிடத்திலே வோட்டு பெற முடியாது. நீங்கள் நிச்சயம் தோல்வி அடைவீர்கள். எனக்கு முன்னுல் பேசிய அம்மையார் அவர்கள், எங்களைப் பார்த்து இந்தத் திட்டத்தை வைத்தே நாங்கள் மக்களிடத்திலே வோட்டுப் பெற முடியுமென்று சொன்னுர்கள். அவர்களுக்கு நான் சவால் விட்டுச் சொல்கிறேன். இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை வைத்தே, மக்களிடத்திலே காங்கிரஸ் கட்சி பெருவாரி யான வோட்டுக்கள் பெற்று, இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைக்கும் அதிகமான அளவுக்கு மெஜாரிடியாக இந்த சட்ட மன்றத்திலே நாங்கள் அமையப் போகிருேம் என்று இந்த நேரத்திலே எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். (ஆரவாரம்) மக்கள் அந்த அளவுக்கு இந்தத் திட்டத்தைப் புரிந்து கொண்டிருக்கிருர்கள். ஆகவே மக்களிடத்திலே உண்மைக்குப் புறம்பாகப் பேசி நீங்கள் வோட்டு வாங்க முடியாது. அதை எதிர்க் கட்சிக்காரர்களும் நன்கு புரிந்து கொண்டிருக்கிருர்கள். திட்டத்திலே சில குறைகள் இருக்கிறது என்று சொல்லுங்கள். அதை நாங்கள் வேண்டாமென்று சொல்ல வில்லை. நமது நிதி அமைச்சர் அவர்கள் சொன்னபடி, இருக்கக் கூடிய குறைகளை நடைமுறையிலே நிவர்த்தி செய்துகொள்ள முடியுமே தவிர, இன்றைக்கே நிவர்த்தி செய்துவிட முடியாது. திட்டத்தை உருவாக்குகின்ற காலத்திலே என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதை அறிந்து, அந்த குறைகளை எப்படி எப்படி நிவர்த்தி செய்யலாம் என்பதற்காகவே நாம் இந்த சட்ட மன்றத்திலே அமர்ந்திருக்கிருேம். திட்டத்தைத்தான் நாம் போட்டு விட்டோமே, நாம் சும்மா இருந்து விடலாம் என்ருல், அதற்கு நாம் இங்கே வந்து உட்காரவேண்டிய அவசியமே இல்லை. பணம் போதாது, அதற்காக மத்திய அரசாங்கத்திட மிருந்து சண்டை போட்டு சண்டை போட்டு நீங்கள் பணம் வாங்க

10th November 1961] [Sri J. Matha Gowder]

வில்லை என்று எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்கிறார்கள். சண்டை போடுவது என்றால் எப்படி சண்டை போடுவது? கத்தியை எடுத்துக்கொண்டு, திடீரென்று தாக்குவதா என்று கேட்கிறேன்? நியாயத்தை எடுத்துக் காட்டி கேட்கிறோம். ஜனத்தொகையின் விகிதாசாரத்தை எடுத்துக் காட்டிக் கேட்கிறோம். மத்திய அரசாங்கத்திலே அங்கிருக்கக்கூடியவர்கள், ஒவ்வொரு மாகாணத்திற்கும் எவ்வளவு கொடுக்கலாம் என்பதைப் பார்த்துச் செய்கிறார்கள். அதற்கு பிளானிங் கமிஷன் என்று ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் இதையெல்லாம் நன்கு பரிசீலனை செய்து முடிவெடுக்கும்போது, சண்டை போடுங்கள் என்று சொன்னால், எங்கே யாரிடத்திலே போய் சண்டை போடுவது? ஒன்று வேண்டுமானால் செய்யலாம். இந்தத் தேர்தல் முடிந்த பிறகு, நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் தயாரிக்கின்ற காலத்திலே வேண்டுமானால், இவர்களை ஒரு டெலிகேட்டாக அமைத்து அங்கே சண்டை போடுவதற்கு அனுப்பலாம். எங்களுக்குச் சண்டை போடுவதில் பழக்கமில்லை. சண்டை போடவும் தெரியாது. அப்படி இருக்கும்போது, இவர்கள் மக்களிடத்திலே சென்று, இந்த மந்திரிகள் எல்லாம் கோழைகள், சண்டைபோட்டு கேட்கத் தெரியவில்லை என்று சொல்வது ஏன் என்பதுதான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதைச் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். அதே போல் இவர்கள் வடநாட்டுக்காரர்களைக் கண்டும் பயப்படுகிறார்கள். வடநாட்டுக்காரர்களை காண்பித்துக் காண்பித்து தென்னாட்டிலே பிரசாரம் செய்துவருகிறார்கள். இப்படிச் சொல்லி தென்னாட்டிலே இருக்கக்கூடிய மக்களையெல்லாம் கோழைகளாக்குகிறார்கள். நம்முடைய நாட்டில் உள்ளவர்கள் எல்லாம் தைரியசாலிகள். ஆனால், இவர்கள் வடநாட்டுக்காரன் நம்மை ஏமாற்றிவிட்டான், இங்கிருக்கக்கூடியவர்கள் எல்லாம் கோழைகள் என்று சொல்லும்போது, மக்களும் இயற்கையாகவே தைரியத்தை இழந்து கோழைகளாகி விடுவார்கள் என்பதை எதிர்க் கட்சிக்காரர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அதே சமயத்தில் பணம் குறைவாக ஒதுக்கப்படுகிறது என்று சொன்னார்கள். இதையும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. மதராஸ் மாகாணம் என்று இருந்தது இப்போது தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா முதலிய மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இப்படி பிரிக்கப்பட்ட பிறகு எவ்வளவு பணம் நம்முடைய மாகாணத்திற்கு ஒதுக்கப்படுகிறது என்பதைப் பார்த்தால், முன்பு எல்லாம் ஒன்றாக இருந்தபோது எவ்வளவு தொகை நமக்கு ஒதுக்கப்பட்டதோ, அதைவிட இப்போது இரண்டு பங்கு அதிகமாக நமக்குப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது நன்கு தெரியும். இதையெல்லாம்கூட அவர்கள் புரிந்துகொள்ளாமல் இவர்கள் மக்களிடத்திலே போய் ஆயிரம் கோடி ரூபாய் கேட்டோம், அதற்கானத் திட்டம் இருக்கிறது, கொடுக்கவில்லை என்று கேட்டால், எங்கே திட்டமிருக்கிறது என்பதுதான் எனக்குப் புரியவில்லை. அதேபோல் பணக்காரர்களை நம்பித்தான் காங்கிரஸ்காரர்கள் இருக்கிறார்கள் என்று பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். பணக்காரர்களிடத்திலே தேர்தல் நிதி வசூல் செய்கிறார்கள் என்று சொல்கிறார்கள். தேர்தல் நிதியை நாங்கள் தெரியாமல் வாங்கவில்லை. அவர்களுடைய கட்சி மட்டும்

[Sri J. Matha Gowder] [10th November 1961

தேர்தல் நிதி வாங்காமலா இருக்கிறது? சமீபத்தில்கூட, கனம் அண்ணாத்துரை அவர்கள் என்னுடைய தொகுதியிலே வந்து இரவு 10 மணிக்கு அல்லவா தேர்தல் நிதி வாங்கிக்கொண்டு போனார். நாங்களாவது தெரிந்து பகலிலே வாங்குகிறோம்.

SRI D. S. AUTHIMOOLAM : On a point of order, Sir. பிளான் பற்றிப் பேசும்போது, திராவிட முன்னேற்றக் கழகம்—காங்கிரஸ் பிரசாரம் பற்றி இந்த அசெம்பிளியில் பேசலாமா என்று கேட்கிறேன்.

SRI J. MATHA GOWDER : இது பொது விவாதம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிப் பேசும்போது, அதிலேயுள்ள குறைகளை அவர்கள் எடுத்துச் சொல்லும்போது, திருப்பி அதற்குப் பதில் சொல்ல நான் கடமைப்பட்டிருக்கிறேன். யார் தேர்தல் நிதி வாங்கவில்லை என்று நான் கேட்க விரும்பு கிறேன்? இவர்களும் தேர்தல் நிதி வாங்குகிறார்கள். நாங்களும் தேர்தல் நிதி வாங்குகிறோம். அப்படி இருக்கும்போது இவர்கள் மட்டும் ஏன் பணக்காரர்களைக் கண்டு பயப்படுகிறார்கள். பணக் காரர்கள் ஒன்றிரண்டு பேர்கள்தான். அவர்களைப் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. இந்த நாட்டிலே ஏழைகள்தான் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். அவர்களிடத்திலேதான் அதிகப்படியான வோட்டுக்கள் இருக்கின்றன. அவர்கள் ஆதரவுதான் எங்களுக்குத் தேவை. ஆகையினாலே அவர்களுக்கு உபயோகப்படும் வகையிலே தான் நாங்கள் திட்டத்தை தயாரித்து வைத்திருக்கிறோம். ஆயிரம் கோடி ரூபாய் வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆயிரம் கோடி ரூபாய்க்கு எங்கே போவது? செங்கல் சூளையா என்ன லாரிகளில் ஏற்றிக் கொண்டுவந்து அடுக்குவதற்கு? செங்கல் சூளை இருந்தால்கூட 1,000 கோடி செங்கல் கொண்டுவருவதற்கு எத்தனை வாகன் வேண்டும், எத்தனை லாரிகள் வேண்டும், அதற்கு எத்தனை காலம் பிடிக்கும்? (குறுக்கீடு) நோட்டு அடிப்பது வேறு இடத்தில் அடிக்கிறார்கள். அந்த நோட்டுச் செல்லாது. அதே போன்று நோட்டு அடித்தாலும் அதைச் சர்க்கார் அனுமதிக்க மாட்டார்கள். மக்களிடம் போய் 1,000 கோடி ரூபாய்க்கு திட்டம் இருக்கிறது, காங்கிரஸ் சர்க்கார் பயன் இல்லை, மத்திய சர்க்காருக்குப் பயப்படு கிறார்கள் என்ற ஒரு வாதத்தை வைத்துக்கொண்டு சொல்லிக்கொண்டே போனால், அடுத்த தேர்தலில் தோற்பது நிச்சயம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். என்ன சாதனை செய்திருக்கிறீர்கள் இந்த ஐந்தாண்டுக் காலத்தில், உங்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பிய தொகுதிக்கு என்ன செய் திருக்கிறீர்கள், இந்த மாநிலத்திற்கு என்ன நன்மை செய்திருக் கிறீர்கள் என்பதை மக்களிடையே எடுத்துச் சொன்னால்தான் மக்கள் வோட்டுப் போடுவார்கள் என்பது உறுதி. பக்கத்து வீட்டுக் காரரைப் பார்த்து பொறாமைப்படுவதில் பிரயோசனம் இல்லை. பக்கத்து வீட்டுக்காரருக்கு ஆண் பிள்ளை பிறந்தால், வயிற்றில் உலக்கையால் இடித்துக்கொள்ளுவது போலுள்ள நிலையில் இருக்கக் கூடாது. உங்களுடைய நிலை பரிதாபகரமாக இருக்கிறது. அந்த நிலையை மாற்றிக்கொள்ளவேண்டும். சர்க்காருடைய

11 a.m.

10th November 1961] [Sri J. Matha Gowder]

சாதனைகளை மக்களிடம் எடுத்துச் சொல்லவேண்டும். அம்மாதிரி மக்களிடம் சொல்லுவதிலே என்ன கஷ்டம் இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை.

முன்பு பேசிய நண்பர் சின்னதுரை அவர்கள் அமெரிக்க நாட்டில் அதிகமாக மின்சார உற்பத்தி ஆகிவிட்டது என்று சொன்னார். அமெரிக்கா எந்த வருஷம் விடுதலை அடைந்தது, நம்முடைய நாடு எந்த வருஷம் விடுதலை அடைந்தது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இங்கே நாம் 4 சதவிகிதம்தான் மின்சாரம் உற்பத்தி செய்கிறோம் என்று சொன்னார்கள். அண்மையிலே அமெரிக்கா சென்றுவிட்டு வந்த நண்பர் திரு. சின்னதுரை அவர்களே இப்படிப் பேசுவது பற்றி நான் மிகவும் ஆச்சரியப்படுகிறேன். நம்முடைய நாட்டு நிலைக்கும், அந்த நாட்டு நிலைக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதைப் பார்க்கவேண்டும். நம்முடைய நாட்டில் உள்ள ஜன நெருக்கம் என்ன என்பதைச் சிந்திக்க வேண்டும். நாட்டில் ஜன நெருக்கத்தை கட்டுப்படுத்தவேண்டுமென்பதற்காக காங்கிரஸ் சர்க்கார் சொன்னால், நண்பர் திரு. சின்னதுரை அவர்கள் அதை எதிர்க்கிறார். குடும்பக் கட்டுப்பாடு ஆகாது என்று சொல்லிவிட்டு, இங்கு ஜனத்தொகையும் அதிகரித்துவிட்டு, இங்கே 4 சதவிகிதம்தான் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது என்று சொன்னால், அறியாமையில் அம்மாதிரி பேசுகிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். அந்த நிலையிலே எந்தவிதமான ஒரு திட்டத்தைச் சொன்னாலும், அதைச் சற்று புரிந்துகொண்டு சொல்லவேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஏதோ மாணவர்கள் உண்ணாவிரதம் இருந்துவிட்டார்களாம் எம்.ஸி. ராஜா கல்லூரியில். உண்ணாவிரதம் இருந்த பிறகு நல்ல அரிசி கிடைக்கிறது என்று சொல்லப்பட்டது. நல்ல அரிசி மக்களுக்கு வேண்டும். (குறுக்கீடு) கல்லூரி ஹாஸ்டலில், வெறும் ஹாஸ்டலில் உண்ணாவிரதம் இருந்தார்களாம். அம்மையார் இரண்டு கரண்டிக்கு மேல் கொடுக்கவில்லை என்று சொன்னார்கள். அதைப் பற்றி நான் ஒப்புக்கொள்ள முடியும். ஆனால் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பால் வேண்டுமென்றால் அயனாவரம் பால்தான் வேண்டுமென்று கேட்கிறார்கள். ஏதோ அரசியல் கட்சிக்காரர்கள்தான் இம்மாதிரி சூது செய்து மாணவர்களை வேறு பக்கம் திருப்பியிருக்கிறார்கள். இதை அவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். அவர்களுக்கே தெரியும். அயனாவரம் பால்தான் வேண்டும் என்று சொல்லுவது சரியா? புலிப் பால் வேண்டுமென்றால் காங்கிரஸ் சர்க்கார் போய் புலிப்பால் கொண்டுவர முடியுமா? கிடைக்கக்கூடிய பாலைத்தான் கொடுக்க முடியும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இன்னும் இரண்டு வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்தத் திட்ட காலத்தில் குறிப்பாக ஆதிவாசி மக்களிடையே நாம் துரிதமாக வேலை செய்யவேண்டும். எங்களுடைய பிரதேசம் ஆதிவாசி மக்கள் இருக்கக்கூடிய பிரதேசம், மலைப் பிராந்தியம். ஆதிவாசி மக்கள் அங்கே காட்டிற்குள்ளே வசிக்கிறார்கள். அவர்களுக்கு நாம் ஓரளவு சலுகைகள் கொடுத்து, வசதிகள் செய்துகொடுத்திருக்கிறோம். அவர்களுக்கு மிக அவசிய

[Sri. J. Matha Gowder] [10th November 1961

மாக வேண்டியது பாதைகள். மதுரை காங்கிரஸ் மகாநாட்டில் கூட இதுபற்றி தீர்மானம் போடப்பட்டிருக்கிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அவர்களுக்கு அதிகமாகப் பாதைகள் போட்டுக்கொடுத்து, ஆதிவாசி மக்களைப்பற்றி கவனம் செலுத்த வேண்டும். பாதைகள் ஒழுங்காக போடப்பட்டு அவர்கள் முன்னேற்றத்திற்கு வழிவகைகள் செய்யவேண்டும். முன்னேற்றம் அடைந்திருக்கக்கூடியவர்களிடத்திலேயே அதிக அக்கறை காட்டாமல், ஆதிவாசி போன்ற மக்களிடத்தில் அதிக அக்கறை காட்ட வேண்டும். சென்னை போன்ற நகரங்களில் அதிக அக்கறை காட்டுவது உசிதம் அல்ல. சென்னை நகர மக்களைக் காட்டிலும், கிராம மக்களை அதிகமாக ஊக்குவித்து, கிராம மக்கள் சென்னை நகர மக்களோடு சரிசமமாகவாழக்கூடிய நிலைமையை உண்டாக்குவதற்கு வேண்டிய திட்டங்கள் போட்டால்தான் அது ஒரு நல்ல திட்டமாக அமையும். இந்தத் திட்டத்தை மனதார வரவேற்று, இதன் மூலம் மக்களுக்கு ஒரு நல்வாழ்வு ஏற்படும் என்ற நம்பிக்கை கொண்டு, நான் என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

* Sri R. CHIDAMBARA BHARATHI : தலைவர் அவர்களே மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் இந்தச் சபை முன்பு சமர்ப்பிக்கப்பட்டு இருக்கிறது. அதை நான் மனமார வரவேற்று, அதற்கு எங்கள் கட்சி சார்பாகக் கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தத்தை ஆமோதிப்பதன் மூலம் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 86 கோடி ரூபாய்க்குத் திட்டம் போடப்பட்டது, ஆனுல் 80 கோடி ரூபாய்தான் செலவாகியிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 152 கோடி ரூபாய்க்குத் திட்டம் போடப்பட்டு, 186 கோடி ரூபாய் வரையிலும் அதிகமாகச் செலவாகி இருக்கிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கிட்டத்தட்ட 291 கோடி ரூபாய்க்குத் திட்டம் போடப்பட்டிருக்கிறது. நாம் மிக சந்தோஷமாக வரவேற்க வேண்டிய விஷயம் எதுவாக இருக்கிறது என்றுல், சர்க்கார் நிர்வாகஸ்தர்கள் முதல் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் இருந்ததைக் காட்டிலும் இரண்டாவது திட்ட காலத்தில் மிக அக்கறையாக வேலை செய்து போடப்பட்ட திட்டத்திற்கு அதிகமாகவும், செலவு அதிகமாகவும் செய்திருக்கிறுர்கள். மூன்றுவது திட்டத்திற்கு நமது சர்க்காரினுடைய கோரிக்கைக்குக் குறைவாக பிளானிங் கமிஷன் கொடுத்திருந்தாலும்கூட, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நாம் அதிகமாக செலவு செய்வதற்கு எப்படி நமக்கு வாய்ப்பு கிடைத்ததோ, அதே போன்று மூன்றுவது திட்ட காலத்திலும் அந்த வாய்ப்பை நாம் அடைய முடியும், அடைவதற்கு பல ஏதுக்கள் இருக்கின்றன. திட்டம் வேண்டும் என்று நினைப்பவர்களும், திட்டம் போதாது, இன்னும் அதிகமாகப் பணம் வேண்டும் என்று நினைப்பவர்களும் முந்திய இரண்டு திட்ட காலத்தில் நல்ல முறையில் சர்க்காரோடு ஒத்துழைத்திருக்கிறுர்களா, நல்ல முறையில் ஒத்துழைக்க வேண்டும் என்று ஜனங்களை அணுகி பிரசாரம் செய்திருக்கிறுர்களா என்று பார்ப்போமானுல், அம்மாதிரி செய்யவில்லை செய்யாது பேசாமல் இருந்தாலும் பரவாயில்லை. முந்திய திட்டங்

10th November 1961] [Sri R. Chidambara Bharathi]

கள் நிறைவேற்றப்படும் காலத்தில் திட்டத்தைப்பற்றி குறை கூறிக்கொண்டு, அது நடைபெறுமல் இருப்பதற்கு எத்தனை விதத்தில் தடங்கல் சொல்லவேண்டும், மறைமுகமாகவும் நேரிடையாகவும் சொல்லவேண்டுமோ அந்த முறையில் பிரசாரம் செய்துவிட்டு, மனப்பூர்வமாகத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு உதவியாக இருக்கவேண்டும் என்ற மனோபாவம் இல்லாமல் இருக்கிறவர்கள் 1,000 கோடி ரூபாய் வேண்டும் என்று சொல்வார்களேயானால் அது எந்த விதத்தில் நியாயம்? அந்த முறையில் இருக்கும்போது தேர்தலுக்கு மக்கள் முன்பாக வோட்டுக் கேட்பதற்கு முதல் இரண்டு திட்டங்களை உபயோகப்படுத்த நினைப்பது நியாயம் அற்ற செயல் என்று நான் யாருக்கும் சொல்ல விரும்பவில்லை. ஆனால், மக்கள் தீர்ப்புக் கொடுப்பார்கள் என்பதில் எனக்கு பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. ஏனென்றால் மக்களுக்கு விஷயம் நன்கு தெரியும். முன்னையமாதிரி உள்ள மக்கள் அல்ல. சுமார் 15 வருஷங்களுக்கு முன்பாக இந்தியாவை நல்ல கண்ணோட்டத்தோடு சுற்றுப்பிரயாணம் செய்த ஒரு இந்திய மகனானவன் இன்றைய தினம் சுற்றுப்பிரயாணம் செய்தால் ஒவ்வொரு சிறிய கிராமத்திலும்கூட இந்த இரண்டு திட்ட காலத்திற்குள்ளாக ஒரு புதிய கட்டிடம் ஏற்பட்டிருப்பதைப் பார்க்கலாம், அதிகமாக மாணவர்கள் பள்ளிகளில் படித்து வருகிறார்கள், புதிய தொழிற்சாலைகள் ஆங்காங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. நல்ல ரோடுகள் இருக்கின்றன. மொத்தத்தில் பார்ப்போமானால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் செய்யப்பட்ட காரியங்களைப் பார்க்கிலும் இரண்டாவது திட்டத்தில் செய்யப்பட்ட காரியங்கள் இரண்டு பங்கு அதிகமாக இருக்கின்றன ஒவ்வொரு விஷயத்திலும். கல்வியை எடுத்துக்கொண்டாலும் சரி, ரோடு வசதியை எடுத்துக்கொண்டாலும் சரி, பள்ளிகள் வசதியை எடுத்துக்கொண்டாலும் சரி அல்லது தொழில் கல்வி பள்ளிக்கூடங்களை எடுத்துக்கொண்டாலும் சரி இரண்டு பங்கு அதிகமாக வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அநேகமாக இப்போது இருப்பதைப்பார்க்கிலும் 6 பங்கு அதிகமாக வசதிகள் ஏற்படுவதற்கு ஏதுக்கள் இருக்கின்றன. தேர்தல் பிரசாரத்திற்காகத் திட்டத்தைக் குற்றம் கூறிக்கொண்டும், திட்டமே இல்லாமல் இருக்கவேண்டும் அல்லது திட்டம் போடுபவர்கள் சர்வாதிகார மனப்பான்மையில் போடுகிறார்கள் என்று எண்ணிக்கொண்டிருப்பவர்களோடு தொடர்பு கொண்டு மக்களிடம் வோட்டுக் கேட்கும் பொழுது மக்கள் நிச்சயமாக ஒன்று நினைப்பார்கள். அதை நினைக்காமல் மக்கள் இருக்கமாட்டார்கள். அப்படி விஷயங்களைப் புரிந்துகொள்ள முடியாத மக்கள் இப்பொழுது சுதந்திர இந்தியாவில் இருக்கிறார்கள் என்று எதிர்க் கட்சிகள் நினைத்தால் அவர்கள் வருகிற பொதுத் தேர்தலிலே படு தோல்வி அடைவார்கள் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவர்கள் புரிந்துகொள்ளாமல் இருக்கிறார்கள் என்று நினைத்து, "தூங்குகிறவன் தொடையில் கயிறு திரித்தவரையில் ஆதாயம்" என்று கருதுகிறார்கள். மக்கள் யாரும் தூங்கவில்லை என்பதை நீங்கள் உணர வேண்டும்.

[Sri R. Chidambara Bharathi] [10th November 1961

இன்னொரு முக்கியமான விஷயத்தையும் பொது மக்கள் தெரிந்துகொண்டு இருக்கிறார்கள். சாதாரணமாக, எதிர்க் கட்சிகளால் சட்ட சபையிலும், பொது மக்கள் மத்தியிலும் பேசப்படுவதுதான். திட்டத்திற்கு 1,000 கோடி ரூபாய் தேவை, இந்த 200 கோடி ரூபாய் வெறும் சுண்டைக்காய் என்று பிரசாரம் செய்கிறார்கள். மக்களுக்குத் தெரியும் இந்தப் பிரசாரத்தின் உண்மை. ஆயிரம் கோடி ரூபாய் என்று சொன்னால், அதை எப்படித் திரட்டுவது, எந்தெந்த வகையில் வரி போடுவது, யார் யாரிடத்தில் கடன் கேட்பது? அதேபோன்று 1,000 கோடி ரூபாய் செலவு செய்வதற்குத் திட்டமிடுவது முக்கியம். ஆகவே எதிர்க் கட்சிகள் எதைச் சொன்னாலும் மக்கள் நம்பிவிடுவார்கள் என்று நினைப்பது தவறு. மக்கள் நினைப்பது என்ன என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். திட்டமென்பது மக்களுடைய தேவை, தேசத்தின் தேவை இரண்டையும் கருத்தில் வைத்துக்கொண்டு, ஆழ்ந்து சிந்தித்து, மக்களுடைய பிரதிநிதிகளையும், மக்களுடைய தலைவர்களையும் கலந்து, மக்களுடைய பிரதேசங்களைச் சுற்றிப் பார்த்து, சூழ்நிலைக்கேற்ப திட்டமிடுவதுதான் சிறந்த முறை. எல்லோருடைய அபிப்பிராயத்தையும் கேட்டு அப்படியே திட்டமிட முடியாது. சூழ்நிலையையும், சந்தர்ப்பங்களையும் தெரிந்துகொண்டு சக்திக்குத் தக்கவாறு பண வருவாயை உண்டாக்கி, செலவு செய்வதற்கு வசதி செய்து, திட்டமிடுவதுதான் முக்கியமானது. அந்த அளவிலே சிந்தித்துப்பார்த்தால், 1,000 கோடி ரூபாய் என்பது நடவாத காரியம். ஆனால், சிலர், பஸ் டிரான்ஸ்போர்ட்டையும், சினிமாக்களையும் தேசீயமயமாக்கிவிட்டால், இந்த 1,000 கோடி ரூபாய் கிடைத்துவிடுமென்று சொல்லுகிறார்கள். அவ்வாறு இப்பொழுதுள்ள சினிமாக் கொட்டகைகளையும், ஓடும் பஸ்களையும் எடுத்துக்கொண்டால்கூட, 5 வருடத்தில் 1,000 கோடி ரூபாய் மிஞ்சுமா என்பது சந்தேகம். நூறு கோடி ரூபாய் கூட கிடைக்காது. கணக்குப் போட்டுப் பார்த்தால் இது தெரியவரும். ஆனால் இன்றுள்ள நிலைமை என்ன? தமிழ் நாட்டிலுள்ள எதிர்க் கட்சிகள், அரசியல் கட்சிகள், தமிழ் நாட்டினுடைய வளர்ச்சியிலோ, தமிழ் மக்களுடைய வருங்கால நல் வாழ்விலோ அக்கறை காட்டாமல், தங்களுடைய கட்சி பலத்திற்காக, தங்களுடைய கட்சி ஆதிக்கத்திற்கு வருவதற்காகப் போடும் சண்டைதான் அதிகமாக இருக்கிறது. அதற்கு வேறு ஒரு உதாரணம் தேவையில்லை. இன்றையதினம் இந்த சபையிலே ஒரு ஹாஸ்டலைப் பற்றிப் பேசப்பட்டது. அதுவே சான்று தங்களுடைய சொத்து, தங்களுடைய பொறுப்பு, தங்களுடைய சாமான்கள் என்றெல்லாம் சொல்லிக்கொண்டு அதிலே அபிமானம் காட்டுவதைப் பார்க்கிறோம். அதைப்போல, அது தேசத்திலுள்ள பொது சொத்து, பொது சாமான்கள் என்ற அடிப்படையில், பொது நோக்கங்களுக்காக அவைகள் உபயோகப்படும் என்ற அடிப்படையில் உங்களுக்கு நல்லெண்ணம் எப்பொழுது வருகிறதோ, அப்பொழுதுதான் இந்த தேசத்தில் வருமானம் கிடைக்கக்கூடிய எந்தத் தொழிலையும் பொது உடைமை ஆக்க முடியும். அந்த உணர்ச்சி இப்பொழுது எதிர்க் கட்சிகளுக்கு

10th November 1961] [Sri R. Chidambara Bharathi]

வந்திருக்கிறதா என்று கேட்டால், இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். மக்களிடம் இந்த உணர்ச்சி வராமல் தடுப்பதற்கு எதிர்க் கட்சிகள் பாடுபடுகின்றன. இதற்குப் பல உதாரணங்களைச் சொல்லலாம். ஒரு உதாரணத்தை இங்கே சொல்ல விரும்புகிறேன். சென்னையிலுள்ள ஒரு ஹாஸ்டலில் "பால் இந்த மாதிரி இருக்கவேண்டும், இரண்டு கரண்டி சாம்பார் வேண்டும், ரசம் வேண்டும், நல்ல மோர் வேண்டும்" என்றெல்லாம் கிளர்ச்சி செய்தால், வயிறு புடைக்குமா அல்லது அறிவு புடைக்குமா என்று கேட்கிறேன். இப்படி ஒரு பொது உணர்ச்சி, பொது நோக்கம் இல்லாமல், கட்சிப் பிரசாரத்திற்காக எதைப்பற்றி வேண்டுமானுலும் பேசலாமென்று நினைத்தால், பஸ் டிரான்ஸ்போர்ட்டையும், சினிமாக்களையும் பொது உடைமை ஆக்கினுல், என்ன மிஞ்சும்? இப்படிச் செய்தால், அரசியல் கட்சித் தலைவர்களுடைய வயிறு புடைக்கலாம், அவர்களுடைய ஆடை, அலங்காரம் அதிகமாகலாம். இதை நன்கு தெரிந்துகொண்டிருக்கிருர்கள் தமிழ் நாட்டு மக்கள் என்பதை உங்களுக்கு நான் நிச்சயமாகச் சொல்ல முடியும்.

எதிர்க் கட்சிகள் எங்களுக்குக் கட்டாயம் தேவை. நீங்கள் நல்ல பொது உணர்ச்சியோடு, நல்ல சித்தத்தோடு சொல்லக்கூடிய யோசனைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிருேம். ஆதலால்தான் நான் சொல்லுகிறேன், மக்கள் தூங்கிக்கொண்டு இருக்கிருர்கள் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். இன்னும் கோடிக்கணக்கான பணத்தை இந்த நாட்டிற்குச் செலவிட வேண்டுமென்று சொன்னுல், என்றைக்கு எதிர்க் கட்சிகளுக்கு பொது உணர்ச்சியும், பொது நோக்கத்திற்காகப் பாடுபடவேண்டுமென்ற உணர்ச்சியும், ஓரளவு பொறுப்பும், நல்ல பண்பாடும் வருகிறதோ, அன்றையதினம் நடைமுறையில் இன்னும் அதிகமான பணத்தைச் செலவு செய்து பல நல்ல காரியங்களைச் செய்வதற்கு ஏதுவாக இருக்கும். அம்மாதிரியான ஒரு நிலைமையை எதிர்க் கட்சிகளும், மக்களும் சீக்கிரத்தில் உண்டாக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஏதோ தேர்தல் காலத்தில் பிரசாரத்திற்காக இந்த மூன்ருவது திட்டத்தைக் கொண்டுவந்திருக்கிருர்கள் சர்க்கார் கட்சிக்காரர்கள் என்று பிரசாரம் செய்கிருர்கள். முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிந்துவிட்டன. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் இப்பொழுது போடப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தாலும், அது குற்றமாகுமா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அது காங்கிரஸ் சர்க்காரின் நோக்கமில்லை என்பது உங்களுக்கும் நன்ருகத் தெரியும். சுதந்திரம் கிடைப்பதற்காக ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் பல தியாகங்கள் செய்த காலத்தில், பல சிரமங்கள் பட்டுக்கொண்டிருந்த காலத்தில், நம் நாடு சுதந்திரம் அடைந்துவிட்டால் என்னென்ன செய்ய வேண்டும், எந்த முறையில் மக்களுடைய ஒத்துழைப்பைப் பெற்று இந்த நாட்டை ஒரு உயர்ந்த நாடாக ஆக்க முடியும் என்ற அடிப்படையில் அப்பொழுது போடப்பட்ட திட்டங்கள்தான் இப்பொழுது

[Sri R. Chidambara Barathi] [10th November 1961

இந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலமாக நடைமுறையில் செயலாக்கப்பட்டு வருகின்றன. அப்படித் திட்டங்களை நிறைவேற்றுவதில், நாங்கள் உங்களைக் காட்டிலும் அதிகமான உணர்ச்சியும், பொறுப்பும் கொண்டிருக்கிறோம். ஆயிரம் கோடி ரூபாய் இல்லை, அதற்கு மேல் 5,000 கோடி அல்லது 10,000 கோடி ரூபாய் என்று நாட்டிற்காக, மக்களுடைய நன்மைக்காகச் செலவு செய்ய விரும்புகிறோம். ஆனால் 1,000 கோடி ரூபாய் செலவழித்தால், இன்னும் ஐந்தாண்டுகளில் அதிலிருந்து 1,500 கோடி ரூபாய் வருமானம் வருமா என்பதை யோசித்து நாங்கள் திட்டங்கள் போட்டு வருகிறோம். இதை நீங்கள் புரிந்துகொள்ளாவிட்டாலும், மக்கள் புரிந்துகொண்டுள்ளார்கள்.

ஒரு விஷயத்தை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். வைகை நதியின் இரு கரையிலும் இரண்டு வாய்க்கால்கள் வெட்டி அந்த வாய்க்காலிலிருந்து கண்மாய்களுக்குத் தண்ணீர் கொண்டு செல்லும் கால்களுக்கு ஷட்டர்ஸ் கட்டி பாசன வசதிக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்ற ப்ரப்போசல் இருந்தது. முதல் சலுகையான இதை மூன்றாவது திட்ட ஆரம்ப காலத்திலேயே செய்வது என்று இருந்தது. இந்தத் திட்டம் இந்தச் சபையில் முதலில் ப்ரபோஸலாக வைக்கப்பட்ட புத்தகத்தில் அச்சடித்தும் கொடுக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது வந்துள்ள இறுதியான மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இது காணப்படவில்லை. வைகை என்ற பெயரையே காணோம். ஆனால், மொத்தத்தில் செலவழியும் ரூபாயில் இந்தத் திட்டமும் சேர்க்கப்பட்டு இருக்கலாம். ஆனால், அது இந்தப் புத்தகத்தில் இல்லாததால், அதைக் குறிப்பிட்டேன். அநேகம் கோடி ரூபாய்கள் செலவில் பல திட்டங்கள் போடலாம். ஆனால், இந்த வைகைக்கால் திட்டம், சுலபமாகச் செய்வதற்கு இயற்கையாக அமைந்திருப்பது. இதைச் செய்தால் தண்ணீர் வீணாக்காமலும் வெள்ளப் பெருக்குக் காலத்தில் சேதமில்லாமல் தடுப்பாகவும் விவசாயத்திற்கு உதவி செய்யக் கூடியது. ஏற்கனவே வைகை அணைக்கட்டு கட்டியாகிவிட்டது. பத்து கோடி ரூபாய் செலவில் அணைகள் 20 ஆயிரம் ஏக்கர் சாகுபடிக்குக் கொண்டுவரப்படுகின்ற அவசியம்தான். அதிலிருந்து இரண்டு வாய்க்கால்கள் கொண்டுபோனால், வைகைக்குப் பாத்தியப்பட்ட தண்ணீரிலிருந்து குறைந்தது 1¼ லட்சம் ஏக்கராவுக்குப் பாசனம் கிடைக்கும் என்று நிபுணர்கள் சொல்லி இருக்கிறார்கள். அது பொது மக்கள் சார்பாக சட்டசபையிலும் கேட்டுக்கொள்ளப்பட்டு, சர்க்காராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு இருக்கிறது. அதிகாரிகள் நன்கு ஆராய்ச்சி செய்து, சர்வே செய்து, எஸ்டிமேட்டும் சிந்தித்துப் போட்ட திட்டம் அது. அப்படி ஏற்றுக்கொண்ட திட்டத்தை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஒரு மூன்று நான்கு கோடி ரூபாய்ச் செலவில் செய்தால், 1¼ லட்சம் ஏக்கரா நிலங்கள் விவசாயத்திற்கு வர ஏதுவாக இருக்கும். அதை இந்தத் திட்ட கால முதலிலேயே செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன். இந்தச் சந்தர்ப்பம் கொடுத்த தலைவருக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

10th November 1961]

TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM): கனம் அங்கத்தினர் எதிர்க் கட்சிகளைக் குறித்துச் சொல்லும் போது "நீங்கள், நீங்கள்" என்று சொல்லுவது சரியில்லை. அப்படிக் குறிப்பிடக் கூடாது. சபைத் தலைவர் மூல மாகத்தான் பேசவேண்டும். நேரடியாகப் பேசுவது சரியாகாது என்று சொல்லிக்கொள்கிறேன். பேசும்போது நடுவில் குறுக்கிட வேண்டாம் என்று காத்திருந்தேன்.

SRI S. M. ANNAMALAI: சட்ட மன்றத் தலைவர் அவர் களே, இன்றைக்கு சட்ட மன்றத்தின் முன்னால் வைத்திருக்கும் நம் தமிழ் நாட்டு மூன்றாவது திட்டத்தைப் பற்றி ஒரு சில வார்த் தைகள் பேச விரும்புகிறேன். இதே சட்ட மன்றத்தின் முன்னால், "ட்ராப்ட் அவுட்லைன்" என்று ஒரு புத்தகம் முன்பு வைக்கப் பட்டது; அதையும் இந்த மன்றம் விவாதித்தது. அன்றைக்கு வைக்கப்பட்ட புத்தகத்தின்படி நம் மாநிலத்திற்கு வேண்டியிருந்த தொகை 400 கோடி ரூபாய். ஆனால் இன்றைக்கு வைக்கப்பட்டி ருக்கும் புத்தகத்தின்படி, இந்த மூன்றாவது திட்டம் குறைக்கப் பட்டு, ஏறத்தாழ 291 கோடி ரூபாய் செலவழிக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. "ட்ராப்ட் அவுட்லைன்" Draft Outline' விவாதத்தில் இருக்கும்போது, அமைச்சரவர்களே சொன்னார்கள், மாநில சர்க்கார்களுக்கு ஒதுக்கும் தொகை 2,000 கோடி என்றால், நம் மாநிலத்திற்கு 189 கோடியாகச் செலவழித் தோம் இரண்டாவது திட்ட காலத்தில் என்று. இன்றைக்கு இந்த மூன்றாவது திட்டத்தில் மாநில சர்க்கார்களுக்கு 3,250 கோடி என்று வைத்துக் கொண்டால், நம் மாநிலத்திற்கு 350-லிருந்து 365 கோடி வரை கிடைக்கலாம் என்றும் சொன்னார்கள். இன்றைக்கு பார்க்கும்போது, மாநில சர்க்கார்களுக்காக மத்திய சர்க்கார் ஒதுக்கியிருக்கும் தொகை 3,650 கோடியாக உயர்ந்திருந்தும், நம் மாநிலத்திற்கு 291 கோடி அளவில்தான் கிடைத்திருக்கிறது. இதிலேயும் மத்திய சர்க்காரிலிருந்து 191 கோடிதான் நமக்குக் கிடைக்கும். மீதமுள்ள 100 கோடி ரூபாயை யும் மாநில சர்க்கார் எந்த எந்த வகையில் தேடப்போகிறார்கள் என்பதையும் இந்தப் புத்தகத்தில் அமைச்சரவர்கள் சொல்லி யிருந்தால் நன்றாக இருக்கும். எந்த வகையில் நிறைவேற்றப் போகிறோம், . "What are the resources" என்று சொல்லப்பட வில்லை. சில அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும் காலங் களில், 40 கோடி வரை வரி போட்டுத்தான் செய்யப்போகிறோம் என்று சொல்வதைப் பார்த்தால், ஒரே குழப்பமாக இருக்கிறது. இன்றைக்கு பண வீக்கம் அதிகமாக இருக்கிறது; விலைவாசிகளும் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போகிறது. இந்த நிலையில் எந்த அளவுக்கு மக்களின் வாங்கும் சக்தி இருக்கிறது என்று சர்க்கார் பரிசிலனை செய்ய வேண்டும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றியான பிறகும், கிராமப் புற மக்களின் நிலை என்ன, அவர்கள் அடைந்த பலன் என்ன என்று ஒரு கமிட்டியையாவது நியமித்து ஆராய்ச்சி செய்து பார்த்திருந்தால், அதன் பலாபலன்கள் தெரிந்திருக்கும். 1950-51-ல் இருந்ததை விட இன்றைக்கு இரண்டு திட்டங்கள் நிறை

[Sri S. M. Annamalai] [10th November 1961

வேற்றியான பிறகும் கிராமப்புற மக்களின் Per-capita income மேலும் குறைந்திருக்கிறதே தவிர உயரவில்லை. இதிலிருந்து கிராமப் புறங்களில் திட்டங்கள் எந்த அளவுக்கு நிறைவேறி யிருக்கிறது என்பது நன்கு விளங்கும்.

இதே போலத்தான் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டமும். இதிலே மத்திய சர்க்கார் திட்டம் என்றும், மாநில சர்க்கார் திட்டம் என்றும், இன்னும் தனியார் திட்டம் என்றும் மூன்று விதத்தில் இதை நிறைவேற்றப் போகிறார்கள். இதிலே மத்திய சர்க்கார் திட்டங்கள் என்னென்ன என்று குறிப்பிட்டிருந்தால், நலமாக இருக்கும். மாநில சர்க்கார் திட்டங்கள் பொறுத்த வரை யில், இந்தச் சட்ட மன்றத்திலேயே ஐந்து பிரேரணைகளை நிறை வேற்றி அனுப்பியிருக்கிறோம். அவற்றில் மத்திய சர்க்கார் எதை எதை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள், எதை எதை புறக்கணித் திருக்கிறார்கள் என்று விவரம் கொடுத்திருந்தால் நலமாக இருக்கும். நன்றாக விளங்கியிருக்கும். "Price Policy" அத்தியாவசியப் பண்டங்களின் விலைகள் ஏறிக்கொண்டே போகின்றன. அதைக் கட்டுப்படுத்த, "Price Policy" என்று மத்திய சர்க்காரால் திட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. மாநில சர்க்கார் அம்மாதிரி கட்டுப்பாடு செய்யப் போகிறார்களா, அல்லது உணவுப் பண்டங்களின் விலைகள் ஏறிக்கொண்டேதான் போகும் என்று விட்டுக்கொண்டே இருக்கப் போகிறார்களா? இந்த மூன்றாவது திட்டத்திலும், விலை ஏற்றத்தை கண்காணிக்கா மல் விட்டுவிடப் போகிறார்களா என்பதை அமைச்சரவர்கள் தன் பதிலில் சொல்லவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நேற்று பேசும்போது அமைச்சரவர்கள் சொன்னார்கள், தனி யார் துறையும் பொதுத் துறையும் ஒன்றோடொன்று சேர்ந்து இயங்கிக்கொண்டே போக வேண்டும், இரட்டை மாட்டு வண்டி போல என்று சொன்னார்கள். ஏன், இரயில் வண்டி, ஆகாய விமானம் என்று சொல்லக் கூடாது? (கனம் ஸ்ரீ. ஸி. சுப்பிர மணியம்: ஆகாய விமானம் என்றாலும், இரண்டு ப்ரொபெல்லர்கள் போல்!) இரயில் வண்டி வேகத்தில் என்றாவது சொல்லக் கூடாதா? இரட்டை மாட்டு வண்டி வேகத்தில்தானா. எதற்காகச் சேர்ந்து இயங்க வேண்டும்? இதைப் பார்க்கும்போது, இந்த நாட்டில் சமதர்மக் கொள்கை மேலும் எப்படிப் பின்பற்றப்படும் என்றுதான் புரிந்துக்கொள்ள முடியவில்லை. சமதர்மக் கொள்கை வளர வேண்டுமானால் தனியார் துறை குறைய வேண்டும், சர்க்கார் துறை அல்லது பொதுத் துறை அதிகரிக்க வேண்டும். தனியார் துறைக்கு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 45·26 கோடி ரூபாய் என்றால், இரண்டாவது திட்டத்தில் 184 கோடி முதலீடு செய்திருக் கிறார்கள். ஆகவே, இது நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே போய், மேலும் மேலும் தனியார் துறை வளர்ந்துகொண்டே வருகிறது. இதைப் பார்க்கும்போது எந்த அளவில் சமதர்மக் கொள்கை கையாளப்படுகிறது அல்லது ஏற்றுக்கொள்ளப்படுகிறது என்பதை நான் சந்தேகிக்கும் அளவில்தான் இருக்கிறேன்.

10th November 1961] [Sri S. M. Annamalai]

இந்த புத்தகத்தில் விவசாயத் துறைக்கு ஏறத்தாழ 11 கோடி ரூபாய் என்றிருக்கிறது. முதலில் புத்தகத்தின் புள்ளி விவரப்படி வேளாண்மைக்கு 27 கோடி என்று இருந்தது. கடைசியில் இப் பொழுது இந்தப் புத்தகப்படி பார்த்தால், அது 11.07 கோடிதான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, சொன்னதில் 45 பர்செண்ட்தான் செலவழிக்கப் போகிறார்கள் என்று ஆகிறது. இப்படிப் பாதியளவுக்கூட இல்லாமல் முக்கியமான திட்டங்களைக் குறைத்துக்கொண்டே போவதைப் பார்த்தால், மூன்றாவது திட்டம் நிறைவேற்றப்பட்டும் என்ன பிரயோசனம் என்று சந்தேகிக்கும் அளவில்தான் இருக்கிறேன்.

நேற்றைக்கு அமைச்சரவர்கள் இதே புத்தகத்தைத் துருவித் துருவிப் படிகக வேண்டும் என்று சொன்னார்கள். படித்துப் பார்த்தால், இந்தப் புத்தகத்திற்கும், முன்னால் கொடுத்த புத்தகத் திற்கும் அதிக வித்தியாசம் இருக்கிறது என்று தெளிவாகிறது. எதை நம்புவது என்றே புரியவில்லை.

அதேபோலத்தான், வட ஆற்காடு மாவட்டத்தைப் பொறுத்த வரை அது தொழில் துறையில் மிகவும் பின் தங்கி இருக்கிறது என்பது தெரியும். சென்ற ஆண்டுகூட, The Economic Invesigati Team என்று ஒரு Team'' மத்திய சர்க்காரிலிருந்து வந்தது; வட ஆற்காடு மாவட்டத்தை சுற்றிப் பார்த்து ஒரு ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறது. 1961-ம் ஆண்டு, அக்டோபர் மாதம் 27-ம் தேதி அந்த ரிப்போர்ட்டின் நகல்கூட எனக்குக் கிடைத்தது. அந்த ரிப்போர்டைப் பார்க்கும்போது, மற்ற மாவட்டங்களைவிட வட ஆற்காடு மாவட்டம் தொழில் துறையில் மிகவும் பின் தங்கியிருக் கிறது என்ற வகையில் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி நாங்கள் பல முறை இந்தச் சட்ட மன்றத்தில் வற்புறுத் தினால், இந்தப் புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு, அதற்குக் கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லாமல் தட்டிக் கழித்து விடுகிறார். ஆகவே, வட ஆற்காடு மாவட்டம் பிற்போக்காக இருப் பதால் அதற்கு பதில் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். இந்த அறிக்கையைப் பார்க்கும்போது வட ஆற்காடு எவ்வளவு பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது என்பது தெரிய வரும். அது மிகவும் பின் தங்கி இருக்கக்கூடிய காரணத்தால் வருங் காலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பல திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். தொழில் துறையில் அது ரொம்பவும் பின் தங்கி இருப்ப தால் தொழில் துறையில் பல அபிவிருத்தி வேலைகளை எடுத்துச் செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் தொழில்களை ஆரம்பிப்பதற்கு அங்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறது. அது பற்றி அந்த அறிக்கையில் நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அப்படிப்பட்ட வட ஆற்காடு மாவட்டத்தில் தொழில் துறையில் மேலும் அபிவிருத்தி செய்யவேண்டும் என்று நான் சொல்லிக்கொண்டு என் பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளு கிறேன்.

[10th November 1961

SRI A. MARIAPPAN : கனம் தலைவர் அவர்களே, கனம், நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நான் வரவேற்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தத் திட்டத்திலுள்ள கருத்து வேறுபாடு களைப்பற்றி நேற்று விளக்கம் கூறியதைப்பற்றி வரவேற்று அதற்கு என் நன்றியைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

தமிழ் நாட்டில் அதிகமான நூற்பு ஆலைகள் இருக்கிற காரணத் தால் தமிழ் நாட்டைப் பொறுத்த வரைக்கும் அந்த வகையில் முன்னேற்றமடைந்திருக்கிறது என்ற காரணத்தால் அதிகப்படி யான ஸ்பிண்டில்களை ஒதுக்கவில்லை. ஆகவே, கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவாவது தமிழ் நாட்டிற்கு அதிகப்படியான ஸ்பிண்டில்கள் இவ்வளவு பர்செண்ட் என்று கிடைப்பதற்கு இந்தச் சர்க்கார் மத்திய சர்க்காரிடம் முயற்சி செய்யவேண்டும். குறிப்பாக தமிழ் நாட்டில்தான் அதிகப்படியான கைத்தறி நெசவாளர்கள் இருக் கிறார்கள். வெள்ளைக்காரன் இருந்த காலத்தில் இங்கு அதிகப் படியான நெசவாளர்கள் இருந்த காரணத்தாலும் கைத்தறி அந்தக் காலம் முதற்கொண்டு நல்ல அபிவிருத்தி அடைந்து வந்ததன் காரணமாகவும் குறைவாக இங்கு ஒதுங்கி இருக்கிறார்கள். ஆகவே, அதை அதிகப் படுத்த முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். கூட்டுறவு சங்கங்கள் மூலமாக இன்னும் அதிகப்படியாக ஒதுக்கு வதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

எதிர் கட்சியினரைப் பொறுத்த வரைக்கும் அவர்கள் அடிக்கடி ஊழல்களைப்பற்றியும் குறைகளைப்பற்றியும் தான் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். ஆனால் ஊழல்களும் குறைகளும் எங்கே இருக்கிறது என்று பார்த்தால் அநேகமாக திராவிட முன்னேற்றக் கழக சங்கத்தைச் சேர்ந்தவர்கள் நிர்வகிக்கக்கூடிய ஸ்தாபனங் களில்தான் அதிகப்படியான ஊழல்களும் குறைகளும் இருப்ப தாகத் தெரிய வருகிறது. தமிழ் நாட்டில் ஒன்றிரண்டு ஸ்தாப னங்கள் அவர்களிடம் இருந்தாலும் அங்கு திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் நிர்வாகம் செய்தால் அங்குதான் அதிகப் படியான ஊழல்கள் இருக்கின்றன. அவர்கள் செய்யக்கூடிய ஊழல்கள் போல வேறு யாரும் செய்வதாகத் தெரியவில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் எங்கேயெல் லாம் ஸ்தாபனங்களை நடத்துகிறார்களோ அங்குதான் இப்படிப் பட்ட ஊழல்கள் நடைபெறுகின்றன. சமீப காலத்தில்கூட ஒன்று நடந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் நடத்தக்கூடிய கூட்டுறவு சங்கத்தில் 47 நெம்பர் கேட்டபோது அங்கு கிடைக்கவில்லை. அங்கு கொடுக்கப்பட்டதெல்லாம் தனிப் பட்ட முறையில் விற்கப்பட்டிருக்கிறது என்று தெரிய வந்தது. ஆகவே, அவர்களே ஊழல்களையும் தவறுகளையும் செய்துவிட்டு எங்கு பார்த்தாலும் ஊழலும் தவறுகளும் நடக்கின்றன என்று சொல்லிச் சொல்லி மக்களை ஏமாற்றி வருகிறார்கள். அவர்களேதான் ஊழல், ஊழல் என்று பேசுகிறார்கள். அதே மாதிரித்தான் பஸ்போக்குவரத்தை பஸ் தொழிலை தேசிய மய

10th November 1961] [Sri A. Mariappan]

மாக்க வேண்டுமென்று சொல்லி வருகிறார்கள். அவர்கள் தான் இதைப்பற்றி அதிகமாகப் பேசுகிறார்கள். சமீபத்தில் சேலத்தில் கூட்டுறவு சங்கக் கூட்டம் நடைபெற்றபோது அங்குள்ள உபதலைவர் ஒருவர் சொன்னார், அதாவது திராவிட முன்னேற்றக் கழக தலைவர் சொன்னதாகச் சொன்னார், பஸ் போக்குவரத்தை தேசீய மயமாக்க வேண்டும் என்பது திராவிடக் கழகத்திற்கு இஷ்டம் இல்லை என்றும் பொது மக்களிடம் பிரசாரம் செய்வதற்காகத்தான் அப்படிப் பேசப்படுகிறது என்றும் சொன்னதாகச் சொன்னார். இப்படியே அந்தக் கூட்டத்திலும் அறிவித்தார்கள். இப்படி மக்களிடம் சொல்லி ஏமாற்றி வருகிறார்கள். இப்படிச் சொல்லி வோட்டு வாங்க வேண்டும் என்று சொல்லுவதாகத் தெரிய வருகிறது நான் இதைச் சொல்லும்போது திருவண்ணாமலை அங்கத்தினர் அவர்கள் சிரிக்கிறார், அதாவது நான் சொல்வது தவறு என்று நினைத்துக் கொண்டு. நான் சொல்வதில் தவறே இல்லை, இதை நான் நிரூபிக்கத் தயாராகவும் இருக்கிறேன். பஸ் போக்கு போக்குவரத்தை தேசீய மயமாக்க வேண்டுமென்ற எண்ணம் திராவிட முன்னேற்றக் கழகத்திற்குக் கிடையாது. வெறும் பிரசாரத்திற்காகத்தான் அப்படிச் சொல்லி வருகிறார்கள். அவர்களுக்கு அதில் பொறுப்பு இல்லை, ஏதோ வேண்டுமென்று அழகாகச் சொல்லி விடுகிறார்கள். ஆகவே, இம்மாதிரி அவர்கள் இங்கு பேசுவதற்கும் வெளியில் பேசுவதற்கும் விரோதம் இருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சேலம் பெங்களூர் ரயில் பாதை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இடம் பெற்றிருக்கிறது. அதற்காக மாகாண அரசாங்கத்தைப் பாராட்டுவதுடன் அவர்கள் அதை வெகு வேகமாக நிறைவேற்ற முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

தமிழ் நாட்டைப் பொறுத்த வரைக்கும் சேலம் ஜில்லா மிகவும் பெரிய ஜில்லா, சுமார் 36 லட்சம் ஜனத்தொகை கொண்ட ஜில்லா. அங்கு ஒரே ஒரு கல்லூரிதான் இருக்கிறது. அதனால் அங்குள்ள மாணவர்கள் வேறு ஜில்லாக்களுக்குச் சென்று படிக்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே, சேலத்திற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கல்லூரியை அதிகமாக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு தமிழ் நாடு அரசாங்கம் வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் குடி தண்ணீர் வசதிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சேலம் நகரசபை, இன்னும் ராசிபுரம், திருச்செங்கோடு, நாமக்கல் போன்ற பகுதிகளுக்குக் குடி தண்ணீர் வசதி செய்யத் திட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. சேலம் நகரசபையைப் பொறுத்த வரைக்கும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் எண்பது லட்சம் ரூபாய்க்குக் குடி தண்ணீர் வசதிக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்காக நான் பாராட்டுகிறேன். அதற்கு அரசாங்கத்தைப் பாராட்டு

[Sri A. Mariappan] 10th November 1961

வதுடன் அந்த வேலைகளை வெகு சீக்கிரமாக எடுத்து முடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதிகப்படியான தொகையை ஒதுக்கியாவது உடனடியாக அதை எடுத்து நடத்த வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே மாதிரி ராசிபுரம் பொறுத்த வரைக்கும் அங்கே குடி தண்ணீர் பஞ்சம் மிகவும் அதிகமாக இருக்கிறது. அதுவும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தாலும் அதற்கு முதலிடம் கொடுத்து அதிகப்படியான தொகை ஒதுக்கி அதை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய வழிவகையும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

மேலும் சேலம் நகரசபைக்கு கழிவு நீர் அகற்றும் திட்டத்திற்கு என்று 25 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சேலம் நகர சபை தமிழ் நாட்டிலேயே பெரிய நகரசபை. அதற்கு 25 லட்சம் ரூபாய் ஒதுக்கியது போதாது. அதை இன்னும் அதிகப்படுத்தி அதை நிறைவேற்றுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சேலம் இரும்புக் கனி, நெய்வேலி பழுப்பு நிலக்கரி இவைகளை பயன்படுத்தும் வகையில் சேலத்தில் இரும்பு தொழிற்சாலையை அமைப்பதாகக் கூறியிருக்கிறார்கள். அப்படி ஆரம்பிப்பதற்கு வேண்டிய வாய்ப்புகள் அங்கு இருக்கின்றன. அதை உடனடியாக ஆரம்பிக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். குறிப்பாக சேலம் ஜில்லாவில் தத்தம்பட்டி தாலுகாவில் தொழிற்சாலையை ஆரம்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கூடிய சீக்கிரம் அங்கு வேலை துவங்குவதாக இருக்கிறது. அதைத் துரிதமாக ஆரம்பிக்க வேண்டும். அங்கு இரும்புத் தொழிற் சாலையை ஆரம்பிக்க 25 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்காக தமிழ்நாட்டு அரசாங்கத்தையும், மத்திய அரசாங்கத் தையும் பாராட்டுவதுடன் அங்கு இரும்புத் தொழிற்சாலை குறிப் பாக சேலம் ஜில்லாவிற்கு வருவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சேலம் ஜில்லாவில் மேட்டூர் அணைக்கட்டு இருக்கிறது. அது இருந்தாலும் சேலம் ஜில்லா மக்களுக்கு அது எந்தவிதத்திலும் பலன் கொடுக்கவில்லை. சமீபத்தில் வெள்ளப் பெருக்கினால் பல கிராமங்கள் தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் பாதிக்கப்பட்டன. அப்படிப்பட்ட நிலைமை ஏற்படாதவாறு ஹோகநக்கல் என்ற இடத்தில் ஒரு அணையைக் கட்டி தண்ணீரைத் தேக்கி வைத்தால் இப்படிப்பட்ட வெள்ளப்பெருக்கு ஏற்படுவதற்கு இடம் இருக்காது. வெள்ளம் வரும் காலத்தில் அதைத் தடுக்கக்கூடிய வாய்ப்பு இருக் கிறது. இதைப்பற்றி அரசாங்கம் ஆராய்ச்சி செய்துகொண்டிருப்ப தாகக்கூட தெரிய வருகிறது. அதை துரிதமாகச் செய்யவேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

தொப்பையாறு திட்டம் வேண்டுமென்று சொல்லிக்கொண்டு வந்திருக்கிறோம். அந்தக் கோரிக்கை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்கப்பட்டிருந்தது. ஆனால், தற்போது விடப்

10th November 1961] [Sri A. Mariappan]

பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். தொப்பையாறுத் திட்டத்தையும் இதில் சேர்க்க வேண்டுமென்று நான் வற்புறுத்த விரும்புகிறேன். தொப்பையாற்றிலிருந்து நீர் மேட்டூர் அணைக்குப் போகிறது. வெள்ளக் காலத்தில் அங்கிருக்கும் அணையில் தேக்கி வைக்க ஒரு வாய்ப்பு ஏற்படும். தொப்பையாறு திட்டத்தையும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்குமாறு நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கின்றேன்.

சேலம் ஜில்லாவில் இன்ஜினீரிங் கல்லூரி ஏற்படுத்தப் போவதாக மாநில அரசாங்கம் கூறியிருக்கிறது. அதற்காக அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். சேலம் ஜில்லா மிகப் பெரிய ஜில்லாவாக இருப்பதால் அங்கு ஓரிரு பாலிடெக்னிக்குகள் ஏற்படுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது. ஆகவே, அங்கு ஓரிரு பாலிடெக்னிக்குகளை ஏற்படுத்திக் கொடுக்குமாறு அரசாங்கத்தை நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

கைத்தறித் துறைக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 6 கோடி 59 லட்ச ரூபாய் செலவழிக்கப்பட்டிருந்தது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எட்டு கோடி ரூபாய் கொடுப்பதற்கு முன்வந்திருப்பதற்காகப் பாராட்டுகிறேன். கைத்தறியைப் பொறுத்தவரையில் நம்முடைய தமிழ் நாட்டில்தான் அதிகமான கைத்தறி நெசவாளர்கள் இருக்கிருர்கள், ஆதலால் இந்த எட்டு கோடி ரூபாய் போதாது. அதை உயர்த்த வேண்டும். அதோடு கைத்தறி நெசவாளர்களுக்குக் கொடுக்கப்படும் பிராவிடெண்ட் பண்டு போன்றவற்றுக்கு நெசவாளர் ஒரு பகுதி கொடுத்தால் அரசாங்கம் ஒரு பகுதி கொடுப்பதாக வாக்குறுதி அளித்திருந்தது. ஆனல், அது நடைமுறைக்கு வரும்போது, நெசவாளர் ஒரு பகுதியும், அரசாங்கமும் நெசவாளர் சங்கமும் சேர்ந்து ஒரு பகுதியும் கொடுக்க வேண்டுமென்று தற்போது திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. நெசவாளர் சங்கத்திலிருந்து நெசவாளருக்கு ஒன்றும் கொடுக்க முடியாத நிலைமைதான் இருக்கிறது. நெசவாளர் சங்கம் கொடுப்பது என்பது முடியாது. அதுவும் ஆண்டு தோறும் அவர்களால் தரமுடியாது. இதையும் மனதில் வைத்து, கைத்தறி நெசவாளர்களுக்கு எட்டு கோடிக்கும் அதிகமாகத் தொகை ஒதுக்குவதுடன், பிராவிடெண்ட் பண்டுத் திட்டத்தின்கீழ் நெசவாளிகள் எவ்வளவு தொகை அளிக்கிருர்களோ, அதே அளவுத் தொகையைச் சர்க்காரே கொடுப்பதற்கு முன்வர வேண்டும் என்று நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, நகர சபைகளைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக சேலம் நகரசபை பராமரிப்பில் இருக்கும் ரோடுகள், சென்ற சில ஆண்டுகளாக மிகவும் மோசமாக இருக்கின்றன. நகர சபைகளுக்குக் கொடுக்கப்படும் கிராண்ட் போன்றவைகளை அதிகப்படுத்த வேண்டும். குறிப்பாக நகரங்களில் இருக்கும் மெயின் ரோடுகளை சர்க்காரின் ஹைவேஸ் டிபார்ட்மெண்டார் எடுத்துக் கொள்ள முன்வந்தால்தான் ரோடுகள் நல்ல முறையிலே இருக்க முடியும். சேலத்திற்கு வந்திருப்பவர்களுக்கு அங்குள்ள ரோடுகளின் நிலைமை நன்ருகத் தெரியும். எந்த ரோட்டில் சென்ருலும்,

[Sri A. Mariappan] [10th November 1961]

நகரசபை ரோடு மிக மோசமாக இருக்கிறது. எந்தப் பகுதியிலும் காரில் செல்வது கஷ்டம். நடந்துகூடச் செல்ல முடியாத நிலைமையில் ரோடுகள் மோசமாக இருக்கின்றன. சில சமயம் லாரிகள் வீட்டு ஓரங்களில் போகவேண்டிய நிலைமையில் குழந்தை களின் கால் போய்விடும் நிலைமையும் ஏற்பட்டதுண்டு. அந்த அளவு சேலம் நகரசபையினுடைய நிர்வாகம் மிகவும் மோசமாக இருக்கிறது. ரோடுகள் மோசமாக இருக்கின்றன. அதனால் அங்கு நகரசபைக்கு அதிகமாகப் பணம் ஒதுக்கவேண்டும். (சில கனம் அங்கத்தினர்கள் சிரிப்பு) திராவிட முன்னேற்றக் கழக நண்பர்கள் வேடிக்கையாகச் சிரிக்கிறார்கள். ஆனால், அவர்கள் நிர்வாகத்திற்கு வந்த பிறகுதான், திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் சேலம் நகரசபை நிர்வாகத்தை எடுத்துக்கொண்ட பின்னர்தான் இவ்வளவு மோசமான நிலைமைக்கு வந்திருக்கின்றன. ஆகையால், அரசாங்கம் சேலம் நகரசபைக்கு அதிகமாகப் பண உதவி செய்து, ரோடுகளைச் செப்பனிடவும், கூடிய சீக்கிரம் மெயின் ரோடுகளை யெல்லாம் அரசாங்கமே ஹைவேஸ் டிபார்ட்மென்டின்கீழ் எடுத்துக் கொண்டு, அந்த ரோடுகளைச் செப்பனிட முன்வர வேண்டுமென்று கூறிக்கொண்டு, இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்று என் உரையை முடித்துக்கொள்கின் றேன்.

Sri V. SANKARAN : கனம் தற்காலிகத் தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத் துறை, தொழில் துறை, கல்வித் துறை போன்ற எல்லாத் துறைகளிலும் எந்த அளவு நாம் முன்னேற்றம் அடைய முடியுமோ அந்த அளவு நமக்குக் கிடைக்கும் நிதி நிலைமையை அனுசரித்துப் பல திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. இது உண்மையிலேயே எல்லாப் பகுதியினராலும் பாராட்டப்பட வேண்டிய ஒரு நல்ல திட்டம் என்று கூறவேண்டும்.

(Deputy Speaker in the Chair.)

தொழில்கள் சம்பந்தமாக ஒருசில அபிப்பிராயங்கள் கூறப்பட் டிருக்கின்றன. உதாரணமாக சென்னையைச் சுற்றி பல தொழில்கள் பெருகியிருக்கின்றன. முக்கியமான நகரங்களிலே தொழில்களை அதிகமாகக் கொடுத்துக்கொண்டு வந்திருப்பதைப் பார்க்கிறோம். அதே சமயத்தில் இன்னொரு அபிப்பிராயமும் இருக்கிறது. அதையும் சர்க்கார் மனதிலே கொண்டு ஆராய வேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

முக்கியமாக கச்சாப் பொருள்கள் கிடைக்கும் இடங்களிலே தொழில்களை ஆரம்பிப்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. அது தவிர, கச்சாப் பொருள்கள் கிடைப்பதைப் பொறுத்து மட்டுமல்லாது, பெரிய தொழில்களைக் கூடுமான வரை பின்தங்கிய பகுதிகளில், ஏற்கனவே அபிவிருத்தி ஆகாத மாவட்டங் களில் அமைக்க வேண்டுமென்ற யோசனையை சர்க்கார் பரிசீலிக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் சம அளவு எல்லா இடங் களிலும் பரவ ஏதுவாக இருக்கும். நகரத்தையொட்டி

10th November 1961] [Sri V. Sankaran]

தொழில்களை ஆரம்பிப்பதால் ப்ராக்டிகல் டிபிகல்டி இருக்கிற தென்று சொலலப்படுவதை ஒருசில இடங்களில் கேள்விப்படு கிறோம். ஒரு தொழிற்சாலை கட்டி முடிப்பதற்கு முன்பே அதற்கு எதிர்த்தார்ப்போல் ஒரு தொழிற் சங்கம் ஆரம்பித்து, தொழிலாளர் களுக்கு என்ன என்ன சர்வீஸ் கண்டிஷன் இருக்கவேண்டும் என் றெல்லாம் வகுத்து, தொழிற்சாலை ஆரம்பித்து நடந்தால், அதில் வேலை செய்யப்போகிற தொழிலாளர்கள் எப்படி ஸ்ட்ரைக் பண்ணுவது என்பதற்கு முன்கூட்டியே திட்டம் வகுத்துவிடுவ தாகக் கேள்விப்படுகிறோம் ஒருசில இடங்களில். நகரத்திலேயே தொழில்கள் ஆரம்பிப்பதில் நடைமுறையில் இப்படிப்பட்ட சங்கடம் ஏற்பட இடம் இருக்கிறது. ஆகவே, கூடுமானவரை நகரத்தை விட்டு வெளியே கிராமப் புறங்களில் தொழிற்சாலைகளை ஆரம்பித்தால் இதுபோன்ற கஷ்டங்கள் ஓரளவு தவிர்க்கப்படும் என்று நான் கருதுகின்றேன்.

சேலம் எஃகு தொழிற்சாலையைப்பற்றிச் சொல்லப்பட்டிருக் கிறது. அதுபற்றிக் கடந்த பல ஆண்டுகளாகச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறோம். இந்தத் திட்ட அறிக்கையில் பார்த்தால்கூட, ஆராய்ச்சிக்கென்று 75 லட்ச ரூபாய் ஒதுக்கி வைத்திருப்பதாகவும், திட்ட கால ஆரம்பத்திற்குள் துவக்கப்படும் என்றும் கூறப்பட் டிருக்கிறதே தவிர, திட்ட காலத்தில் ஆரம்பித்து நடத்துவோம் என்று கூறப்படவில்லை. இதில் ஓரளவு தாமதம் இருக்கிறது. கடந்த ஐந்தாண்டுகளாக சொல்லிக்கொண்டு வருகிறோம், ஆராய்ச் சிக்காக அனுப்பப்பட்டிருக்கிறது என்று. அதைத் திட்ட கால ஆரம்பத்திற்குள் ஆரம்பித்து திட்ட காலத்திற்குள் நல்ல முறை யில் அது சீக்கிரமே செயல்படும் வகையில் அரசாங்கம் நட வடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

நெய்வேலி நிலக்கரித் திட்டம்பற்றி ஒரு வார்த்தை. ஒருசில மாதங்களுக்கு முன்பு ஒரு கமிட்டியோடு நான் அங்கு சென்றிருந்த போது அங்கு பொறுப்பாளிகளாக இருந்த ஒருசிலர் கூறினார்கள், மத்திய அரசாங்கத்திலிருந்து பிரிக்கெடிங் அண்டு கார்ப்பனைஸிங் ப்ளாண்ட் பற்றி சாங்ஷன் வராத காரணத்தால் ஓரளவு தாமதம் ஆகிக்கொண்டிருக்கிறது என்று. பழுப்பு நிலக்கரியை எடுத்து உடனடியாக மூன்று திட்டங்களுக்கும் உபயோகித்தால் நல்லது. அதை நாம் உடனடியாக உபயோகப்படுத்த வேண்டும். நிலக் கரியை ஒரு இடத்தில் ஸ்டாக் பண்ணிவிட்டால் அது எரிபொருள் ஆக இருப்பதால் ஆபத்து உண்டாகும் என்றும், பிரிக்கெடிங் அண்டு கார்ப்பனைஸிங் ப்ளாண்டுக்கு சாங்ஷன் வராததால் எங்கள் வேலை ஓரளவு குந்தகமாக இருக்கிறது என்று சொன்னார்கள். அது ஏற்கனவே சாங்ஷன் செய்யப்பட்ட திட்டமானதால், அதில் துரித மான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள் கிறேன்.

பஞ்சாயத்து மூலம் கிராம நிர்வாகம் அமைவது திட்டத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து மூலம் மக்களிடம் நேரடி நிர்வாகத்தை ஒப்படைப்பது நல்ல ஜனநாயக முறையாகும்.

[Sri V. Sankaran] [10th November 1961

ஆனால், நகரங்கள் சம்பந்தமாக சிறு சிக்கல்கள் அடிக்கடி ஏற்பட்டிருக்கின்றன. அதையும் அரசாங்கம் நன்கு கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். உதாரணமாக, மதுரை போன்ற நகரங்களுக்குப் பக்கத்தில் மூன்று நான்கு மைல்களில் உள்ள பகுதிகளைப் பஞ்சாயத்தாகச் சேர்த்திருக்கிறார்கள். அதுபோன்ற பல பஞ்சாயத்துக்கள் ஏற்பட்ட நிலைமையில் நகர சபைகளுக்கு வருவாய் குறையும்படியாக இருக்கிறது. பெரிய பணக்காரர்கள் மதுரையை அடுத்துள்ள இத்தகைய பஞ்சாயத்துப் பகுதியில் பெரிய தொழிற்சாலைகளை அமைத்து அருகே பெரிய வீடுகளைக் கட்டிக்கொள்கிறார்கள். அதனால், அவர்கள் நகரங்களில் உள்ள வசதிகளையும் அனுகூலங்களையும் அடைந்துகொண்டு, நகரங்களுக்கு வருவாய் தரக்கூடியவைகளைத் தரவேண்டிய அவசியமில்லாமல் கிராமப்புறங்களில் இருந்துகொண்டு இருக்கிறார்கள். அதுபோன்ற ஒரு நிலைக்கு இடம் கொடுக்காமல் ஏதாவது ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். பஞ்சாயத்துக்களை அமைக்கும்போது நகரத்தை ஒட்டி சில பகுதிகளை விட்டுவிட்டு, மற்றப் பகுதிகளில் அமைக்க வேண்டும். அப்படி சில இடங்களை ஒதுக்கினால்தான் நகரங்கள் விஸ்தரிப்பு அடைவதற்கு வகை ஏற்படும், நகரசபைகளுக்கும் வருவாய் ஏற்பட முடியும். இல்லாவிட்டால், நடைமுறையில் சில சிக்கல்கள் இருக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக கல்வி சம்பந்தமாகச் சொல்லும்போது அடிப்படைக் கல்வியைப்பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. எல்லாப் பள்ளிக்கூடங்களையும் நாம் ஆதாரப் பள்ளியாக மாற்றிக்கொண்டு வருகிறோம். கிராமப்புறங்கள் என்றால் ஆதாரப் பள்ளிகளுக்கு வேண்டிய விசாலமான இடம் தோட்டம் போட, தொழில்கள் செய்ய கிடைக்கிறது. ஆனால் நகரங்களில் இது வெறும் நடிப்பாகத்தான் இருக்கிறது. அதுவும் ஸ்பின்னிங் ஒன்றுதான் கிராப்ட். அதுவும் இன்ஸ்பெக்ஷன் காலத்தில் நூல், சிட்டம் முதலியவற்றை வாங்கி வைத்துக் காட்டிவிடுகிறார்கள், அவ்வளவுதான். சரியானபடி இங்கே நடைபெறுவதில்லை. மாணவர்களுடைய காலம்தான் விரயமாகிறது. அதை அரசாங்கம் நன்றாக கூர்ந்து கவனித்து அதைத் தீர்க்க என்ன என்ன வழிவகை செய்ய வேண்டுமென்று பார்க்கவேண்டும்.

விவசாயக் கல்லூரிபற்றி சொல்லப்பட்டிருக்கிறது. அநேகமாக இது மதுரையில்தான் வரும் என்று நினைக்கிறேன். ஆனால் இங்கே ஊரைப்பற்றிச் சொல்லவில்லை. மீண்டும் ஒன்றை இப்போது திருப்பிச் சொல்ல வேண்டிய நிலையில் இருக்கிறேன். முன்பு யூனிவர்ஸிட்டி ஆரம்பிப்பதுபற்றிச் சொல்லப்பட்டது. இப்போது அதைப்பற்றி பேச்சே இல்லை. ஆங்கிலத்தில் சொல்வது போல **dropped like a hot potato** என்று போட்டுவிட்டார்கள். இதற்கு முக்கியமான காரணம் மெட்ராஸ் யூனிவர்ஸிடிகாரர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதுதான். இது ஒரு காரணமாகாது. மதுரையும், ராமநாதபுரமும் இப்போது ஒன்றாக இருக்கிறது. ராமநாதபுரம் ஜில்லா தலைநகரை மதுரையில் இருந்து பிரிக்கலாமா என்று மதுரையைக் கேட்டால் இவர்கள் வேண்டாம் என்றுதான் சொல்வார்கள். இவர்கள் செல்வாக்கு குறைந்து போகுமே என்று

10th November 1961] [Sri V. Sankaran]

தான் சொல்வார்கள். ஆகவே, இவர்கள் சொல்வதை ஒரு காரணமாக வைத்துக்கொள்ளக்கூடாது. யூனிவர்ஸிடி மான்யக் கமிஷன் இதற்குச் சாதகமாக அபிப்பிராயம் சொல்லியிருக்கும்போது நாம் அதைப் பார்க்கவேண்டும். ஆகவே, சென்னை சர்வகலாசாலையினரின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் உடனடியாக மதுரையில் ஒரு யூனிவர்ஸிடி ஏற்படுத்த முயற்சி செய்யவேண்டும்.

அடுத்தபடியாக மேல்பாலம் சம்பந்தமாக ஓரிடத்தில் கூறப்பட்டிருக்கிறது. இதில்கூட பிரையாரிட்டி லிஸ்டுபடிதான் எடுத்துக் கொள்வதாகச் சொல்லப்படுகிறது. மதுரை மேல்பாலம் ஒன்று ப்ரையாரிட்டி லிஸ்டில் ஏற்கனவேயே இருக்கிறது என்று நினைக்கிறேன். அதையும் செய்ய வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

வைகை நதிக் கால்வாயைப்பற்றி ஸ்ரீ சிதம்பர பாரதி கூறினர்கள். உண்மையில் அது அவசியம். இப்போது 60 பர்செண்டுக்கு மேல் மண்ணில் தண்ணீர் சேர்ந்துவிடுகிறது. அந்தக் கால்வாயை **lined-up channel** ஆகக் கட்டி விட்டுவிட்டால் அதிகமான தண்ணீர் மிச்சப்படும் என்று சொல்ல விரும்புகிறேன்.

ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் மதுரை போன்ற நகரங்களில் தாமதப்பட்டுக்கொண்டு வருகிறது, உடனடியாக லோன் கிடைக்காத காரணத்தினுலோ வேறு என்ன காரணத்தினுலோ தெரியவில்லை. சிறுதொழில்கள் ஒன்றும் நிறைவேற்றப்படவில்லை. அதை நன்ருகப் பரிசீலிக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

இருப்புப்பாதை சம்பந்தமாக இறுதியில் கூறப்பட்டிருக்கிறது. மூன்ருவது திட்ட காலத்தில் நமக்கு ஒரு பாதையாவது வருமோ என்னவோ தெரியவில்லை. கண்டிப்பாக ஏற்கனவே நான் முன்பு வற்புறுத்தி வந்த சேலம்—பங்களூர், மானமதுரை—விருதுநகர், திருநெல்வேலி—கன்னியாகுமரி ஆகிய மூன்று ரயில் பாதைகளைப் போட்டாக வேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

கூட்டுறவு நூற்பு ஆலைகள் பல ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆனல் நாம் எந்த நோக்கத்தோடு அவற்றை ஏற்படுத்துகிருேமோ அதன் நோக்கம் நிறைவேறவில்லை. கூட்டுறவு சங்கங்களுக்கு நூல் கிடைப்பது இன்னும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆகவே, இந்த ஆலைகளினல் கூட்டுறவு சங்கங்கள், அதில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆகியவர்களுக்கு உண்மையிலேயே அனுகூலம் ஏற்படும்படியாகச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் ராமெட்டீரியல் சம்பந்தமாக சில பேர்களுக்கே லைசென்சு கொடுக்கிருேம். அவர்கள் அதை துஷ்பிரயோகம் செய்கிருர்கள். நாம் நேரிடையாக கன்ஸ்யூமர்சுகளுக்கே பர்மிட் கொடுத்துவிட்டால் இதைத் தவிர்க்கலாம். கயிறு சம்பந்தமாக வாழை நாரில் அது தயாரிக்கப்படுவதை நான் நேரில் பார்த்தேன். அந்தமாதிரியாக நம் ராஜ்யத்தில் செய்வதற்கும் வாய்ப்பு இருக்கிறது. அதையும் செய்யவேண்டும். கூட்டுறவு சொஸைடிகளில் உரம் விநியோகம் செய்வது என்ருல்கூட நிர்வாகிகளுக்கு வேண்டியவர்களே எடுத்துக்கொள்கிருர்கள். ஹவுஸ் பில்டிங்

[Sri V. Sankaran] [10th November 1961

சொஸைடியில்கூட ஒரு சிலரே தங்கள் மாமன், மச்சான் என்று வசதி தேடிக்கொள்கிறார்களே தவிர யார்யாருக்கு வீடு தேவையோ அவர்கள் பயன் அடைவதில்லை. அதையும் கவனிக்க வேண்டும். ஸீ-போர்ன்-கோல் சம்பந்தமாகக்கூட நேரிடையாக வாகன் மூலம் கொண்டு வருவதற்கு வழி இருக்கவேண்டும். இடையில் டன்னுக்கு ரூபாய்க் கணக்கில் லாபம் அடிக்க விடக்கூடாது. கிணறு வெட்ட லோன் கொடுக்கிறபோதும்கூட—அதை வசூலிக்க ஜப்தி பண்ணுகிறார்கள். அது கூடாது என்று கூறிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

12-00 noon.

SRI P. U. SHANMUGAM : சட்டமன்றத் தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட விவாதத்தில் நானும் கலந்துகொண்டு ஒரு சில கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை இந்தச் சபையின் முன் வைத்து நேற்றையதினம் விளக்கிப் பேசிய கனம் நிதி மந்திரியார் அவர்கள் தனக்கே உரித்தான வகையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டமானது எப்படி எப்படிச் செயல்பட இருக்கிறது, அதற்காக என்னென்ன முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்று பேசினார்கள். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுக்கும் வகையில் கடந்த மூன்றாண்டுகாலமாக, அகில இந்திய நிபுணர்களும், மாற்றுக் கட்சித் தலைவர்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் சேர்ந்து ஆராய்ந்து முடிவுக்கு வந்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். இந்தச் சபையில், திட்டக் குழுக் கூட்டத்தில் கலந்து கொள்ளாதவர்கள் அது பற்றி விவாதிக்கலாமா என்றுகூட ஒரு உறுப்பினர் பேச ஆரம்பித்தார். நேற்றையதினம் பேசிய நிதி மந்திரியார் அவர்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற யாரும் முட்டுக்கட்டையாக இருக்கக் கூடாது என்று சொன்னார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொறுத்த வரையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் அதிகமான அளவில் திட்டங்கள் நிறைவேற்றப்படவேண்டுமென்று சொல்வோமே தவிர, அதற்கு முட்டுக்கட்டையாக இருக்க மாட்டோம் என்று உறுதி கூறுகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மீது நான் சொல்ல இருக்கும் கருத்துக்களை உங்கள் மூலம் கனம் நிதி மந்திரியார் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். புள்ளி விவரங்களிலே ஏற்பட்டிருக்கக்கூடிய சில குற்றங்குறைகளை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

சர்க்காரால் நியமிக்கப்பட்ட திரு. லோகநாதன் அவர்கள் 2,000 கோடி ரூபாய் திட்டம் ஒன்றை தயாரித்துக் கொடுத்தார்கள். அது எதற்குப் பயன்பட்டது என்று பார்த்தால் நூல் நிலையத்திலும் அலுவலகத்திலும் உள்ள அலமாரிகளை நிரப்பத்தான் பயன்பட்டது. அண்ணா அவர்கள் ஆயிரம் கோடிக்குத் திட்டம் தந்தார்கள். அது எதற்குப் பயன்பட்டது என்றால் நிதி மந்திரியாரின் மேடைப் பேச்சுக்கு, கேலிப் பேச்சுக்குப் பயன்பட்டதே தவிர வேறு ஒன்றுக்கும் பயன்படவில்லை. சர்க்கார் நியமித்த செயற்குழு 600 கோடி ரூபாய்க்கு ஒரு திட்டம் தயாரித்தது. அது எதற்குப்

10th November 1961] [Sri P. U. Shanmugam]

பயன்பட்டது என்றால் சர்க்கார் அலுவலகத்திலே உள்ள குப்பை கூளத்திற்குத்தான் பயன்பட்டதே தவிர வேறொன்றுக்கும் பயன் படவில்லை. இந்தச் சர்க்காரே தயாரித்து இந்த மன்றத்தில் சமர்ப் பித்த 400 கோடி ரூபாய்த் திட்டம் எதற்குப் பயன்பட்டது என்றால் அது நிதி மந்திரியாரின் வீராவேசப் பேச்சுக்குத்தான் பயன் பட்டதே தவிர வேறொன்றும் இல்லை. இந்தச் சர்க்காரால் கொண்டு போகப்பட்ட 400 கோடி ரூபாய்த் திட்டம் மத்திய சர்க்காரால் வெட்டப்பட்டு இன்றையதினம் 291 கோடி ரூபாய் அளவில் வந்து நிற்கிறது. இந்த 291 கோடி ரூபாய் எதற்குப் பயன்படுத்தப்படும் என்றால் நேற்றையதினம் நிதி மந்திரியார் அவர்கள் "எங்களுடைய தேர்தலுக்காகப் பயன்படுத்தப்படும்" என்று தெளிவாகச் சொல்லிவிட்டார். நான் நிதி மந்திரியாரைக் கேட்டுக்கொள்வேன்—இந்த 291 கோடி ரூபாய்த் திட்டத்தை முன் வைத்துத் தேர்தலில் நிற்கப் போவதாக முன்பே தெளிவுபடுத்தி யிருப்பாரானால் அந்தத் திட்டத்தை திட்டக் குழு முன்போ, மாற்றுக் கட்சித் தலைவர்கள் அடங்கிய குழுவிலோ வைத்து அங்கீ காரம் பெறாமல் காங்கிரஸ் ஒர்க்கிங் கமிட்டியில் அல்லவா வைத்து அங்கிகாரம் பெற்றிருக்க வேண்டும். இந்தத் திட்டத்தை மக்கள் முன் வைத்து உங்களுடைய வோட்டு காங்கிரஸ் கட்சிக்கா அல்லது எதிர்க் கட்சிக்கா என்று கேட்கப் போவதாக நேற்றையதினம் பேசிய நிதி மந்திரியார் சொன்னார். இந்த 291 கோடி ரூபாய் திட்டத்தில் இருக்கின்ற குறைபாடுகள் முழுவதையும் விவாதிக்க அவகாசம் இல்லாத காரணத்தால் விவசாயத்தைப் பற்றியும், உணவைப் பற்றியும் எனக்கு இருக்கும் சந்தேகங்களை நிதி மந்திரி யாரின் முன் வைத்து அவரிடமிருந்து அவற்றுக்கான விளக் கத்தைப் பெற விரும்புகிறேன். தயவு செய்து அலட்சியப்படுத்தி விடாமல் தெளிவாக இதற்குப் பதில் சொல்ல வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

நிதி மந்திரியார் அவர்கள், "இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டப் புத்தகத்தைத் துருவித் துருவிப் படித்திருப்பீர்கள்" என்று சொன்னார்கள். நானும் துருவித் துருவிப் படித்துப் பார்த்தேன். "இந்த நாடு விவசாய நாடு, விவசாயத்தை நம்பித் தான் இந்த நாடு இருக்கிறது, விவசாயந்தான் முக்கியமானது, விவசாயம் அபிவிருத்தியடைந்து உணவு உற்பத்தி பெருகவேண் டும்" என்று அடிக்கடி இந்த மன்றத்திலே நிதியமைச்சர் அவர்கள் கூறி வந்திருக்கிறார்கள். முதலாவது தயாரித்த நகல் திட்டத்தில் ஏறக்குறைய 27.34 கோடியை விவசாயத்திற்கு ஒதுக்கியிருப்பதாக வும், அந்தத் தொகையை செலவழிப்பதன் மூலம் நாட்டிலே உணவு உற்பத்தி 16 லட்சம் டன் அளவுக்கு அதிகமாக முடியும் என்றும் அன்றையதினம் நிதி மந்திரியார் விளக்கம் தந்தார். 27.34 கோடி செலவு செய்து 16 லட்சம் டன் அளவு உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று அன்று சொன்ன நிதி மந்திரியார் இன்றைக்கு வந்திருக்கும் முடிவைப் பார்த்தால், 23 கோடி செலவு செய்து 16.5 லட்சம் டன் அளவு உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று சொல்கிறார். இது என்ன மாயாஜால வித்தை என்று புரியவில்லை. இன்றையதினம் முன்பு நகல் திட்டத்தில்

[Sri P. U. Shanmugam] [10th November 1961

திட்டமிட்டதை விடக் குறைவாகச் செலவு செய்து அதிக அளவு உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று சொல்கிறூர். இது மட்டுந்தானு என்று பார்த்தால், நகல் திட்டத்தில் 8,000 சிறிய நீர்ப் பாசன வேலைகள் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமென்று திட்ட மிட்டிருப்பதை, 5,000 ஆகக் குறைத்துவிட்டார்கள். நகல் திட்டத் தில் 20,000 பம்ப் செட்டுகள் வாங்கிக் கொடுப்பதாகத் திட்டமிடப் பட்டது தற்போது 8,480 ஆகக் குறைக்கப்பட்டுவிட்டது. நகல் திட்டத்தில் 300 ட்ராக்டர்கள் வழங்கத் திட்டமிடப்பட்டது. தற் போது 250 ஆகக் குறைக்கப்பட்டுவிட்டது. 50 கன ரக டிராக்டர் கள் தற்போது 25 ஆகக் குறைக்கப்பட்டு விட்டது. வேளாண்மைக் காக நகல் திட்டத்தில் 25 லட்சம் ஒதுக்கப்பட்டது தற்போது 15 லட்சமாகக் குறைக்கப்பட்டுவிட்டது. விவசாயக் கல்லூரி ஆரம் பிப்பதற்காக நகல் திட்டத்தில் 50 லட்சம் ஒதுக்கப்பட்டது தற்போது 30 லட்சமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. மண்வளப் பாதுகாப்புக்காக 3.83 லட்சம் ஒதுக்கப்பட்டது தற்போது 2.50 லட்சமாகக் குறைக்கப்பட்டுள்ளது. காட்டுப் பகுதி மண் வளப் பாதுகாப்புக்காக ஒதுக்கப்பட்டுள்ள 40 லட்சம் தற்போது 30 லட்ச மாகக் குறைக்கப்பட்டுள்ளது. இப்படிச் செலவை ஒவ்வொரு கட்டத்திலும் குறைத்து விட்டு உணவு உற்பத்தி மட்டும் அதிக மான அளவில் பெருகிவிடும் என்று நிதி மந்திரியார் சொல்வது யாரை ஏமாற்ற என்று தெரியவில்லை. இது என்ன மாயா ஜாலப் புள்ளி விவரம் என்று புரியவில்லை. நேற்றையதினம் மந்திரியார் பேசும்போது "அறிந்தவர்களை ஏமாற்ற அறிஞர்களாலும் முடியாது" என்று பேசினுர்கள். அறிந்தவர்களையோ அறியாதவர்களையோ ஏமாற்றுகிறூர்களா என்பது வேறு விஷயம். அமைச்சர் அவர்கள் யாரை ஏமாற்ற இந்த மாயாஜாலப் புள்ளி விவரங்களைக் கொடுத்திருக்கிறூர்? அமைச்சரவர்கள் ஏமாற்ற லாமா? 27 கோடி செலவு செய்தால் 16 லட்சம் டன் உணவு உற் பத்தி. 23 கோடி செலவு செய்தால் 16.5 லட்சம் டன் உணவு உற்பத்தியா? இதை யார் நம்புவார்கள்? இது படிக்கின்றவர் களுடைய பொது அறிவையே சோதிப்பதாக இருக்கிறதே. நகல் திட்டத்தையும், தற்போது நிறைவேற்ற இருக்கிற திட்டத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் ஒத்துக் கொள்ளக் கூடிய முறையில் இருக் கிறதா?

திட்டத்தில் மத்திய சர்க்கார் குறைத்திருந்தால் நாங்கள் சண்டை போட்டு வாங்குவதில் நிபுணர்கள் என்று ஆளும் கட்சி யைச் சேர்ந்த ஒருவர் குறிப்பிட்டார். மந்திரிகள் மத்திய சர்க்கா ரிலிருந்து சண்டை போட்டு அதிகத் தொகை பெற வேண்டு மென்று காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த முத்தையாச் செட்டியார் அவர்கள் சொன்னுர்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே சொன்னுர்கள். அதற்கு என்ன பதில்? தற்போது கிடைத் திருக்கும் தொகை மிகவும் குறைவாக இருக்கிறதே. மக்கள் ஜனத் தொகை ஆண்டு ஒன்றுக்கு 2 சதவீதம் அதிகரிக்கலாம் என்று நகல் திட்டத்தில் கணக்குக் கொடுத்ததைக் கூட 1½ சத வீதம் என்று குறைத்துவிட்டார்களே. மக்கள் தொகைப் பெருக் கத்தை எப்படி மத்திய சர்க்கார் குறைத்தார்கள்? குடும்பக்

10th November 1961] [Sri P. U. Shanmugam]

கட்டுப்பாடு திட்டத்தை வலியுறுத்துவதன் மூலம் குறைந்து விடுமா? "கன்சம்ப்ஷனை"க் கூட அதே போல் குறைத்து விட்டார்கள். இதுகூட வேடிக்கையல்ல. 500 ஆர்டிசன் கிணறுகளும், 150 குழாய் கிணறுகளும் ஏற்படுத்தப்பட்டு கிணறு ஒன்றுக்கு 50 ஏக்கர் விதம் 32,500 ஏக்கர் சாகுபடியாகும் என்று நகல் திட்டத்தில் புள்ளி விவரம் கொடுத்த அமைச்சர் முடிவான திட்டத்தில் கிணறு ஒன்றுக்கு 100 ஏக்கர் நிலம் சாகுபடியாகும் என்றால் அது என்ன மாயாஜாலப் புள்ளி விவரம். 50 ஏக்கர் என்று சொன்ன அதே நிதி மந்திரி 100 ஏக்கர் என்று சொல்வாரானல் அது மக்களை ஏமாற்றுவதற்காகத்தான் சொல்லப்பட்டதே தவிர வேறென்ன? இதற்கெல்லாம் தெளிவான பதில் எனக்கு வேண்டும். எந்த ஆதாரத்தை வைத்துக் கொண்டு 50 ஏக்கரை 100 ஏக்கர் என்று கொடுக்கிறார்? எதற்காக இந்த வேலைகளைச் செய்கிறார்?

தற்போது ஒதுக்கப்பட்டிருக்கும் 291 கோடி ரூபாயைப் பெற நாம் வரியாகத் தேடிக் கொடுக்க வேண்டிய பணம் 101 கோடி ரூபாய். 101 கோடி ரூபாய் கொடுத்தால் அவர்கள் 291 கோடி ரூபாய்த் திட்டம் கொடுக்கிறார்கள். உத்திரப் பிரதேசத்தை எடுத்துக்கொண்டால் அவர்கள் 147 கோடி ரிசோர்ஸஸ் தேடிக் கொடுத்து அவர்கள் பெறக்கூடிய தொகை 497 கோடி. 101 கோடிக்கு 291 கோடி. 147 கோடிக்கு 497 கோடி. இது எந்த வகையில் நியாயம்? தென்னிந்தியா புறக்கணிக்கப்படுகிறது என்பதைத் தவிர இதற்கு வேறு என்ன பதில் சொல்ல முடியும்? இவ்வளவும் இந்த மூன்றாவது திட்டத்தில் வைத்துக்கொண்டு, திராவிட முன்னேற்றக் கழகத்தவர் வடக்கு வாழ்கிறது தெற்கு தேய்கிறது என்று சொல்லுவது வெறும் பித்தலாட்டம், நமக்கு வேண்டிய தொகை கிடைத்திருக்கிறது என்று கனம் சீனிவாச அய்யர் போன்றவர்கள் சொலுகிறார்கள். நான் சொல்ல விரும்புகிறேன், நெய்வேலி நிலக்கரிக்கு ஏற்பட்ட பரிதாப நிலைமை, சேலம் இரும்புக்கு ஏற்பட்ட பரிதாப நிலைமை வேறு எந்த நாட்டிலுள்ள பொருட்களுக்கு ஏற்பட்டது? எத்தனைவிதமான பரிசிலனை நடக்கிறது. எத்தனையோ பரிசோதனைகளை தாண்டியிருக்கிறது. ஒரு பக்கத்தில் ஜப்பானுக்குப் போகவேண்டும், கிழக்கு ஜெர்மனிக்குப் போகவேண்டும், இத்தாலிக்குப் போகவேண்டும் என்று சொல்லுகிறார்கள். எத்தனையோ ஆராய்ச்சி நடத்துகிறார்கள். ஆனல் உண்மையிலேயே நான் கேட்கிறேன், இந்தத் தொழிலை இதற்கு முன்னால் ஆரம்பிக்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தால், இதற்கு முன்னால் நிர்மாணித்திருக்கக் கூடாதா? நெய்வேலித் திட்டத்தையும், சேலம் இரும்புத் தொழிலையும் இப்போது மட்டும் மூன்றாவது திட்டத்தில் சேர்த்திருப்பது தேர்தலுக்கு வோட்டு வாங்குவதற்காகத் தவிர வேறு என்ன காரணம் இருக்கமுடியும் என்று நான் முறைப்படி கேட்கின்றேன். இது நியாயந்தானா, முறைதானா? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரும்புத் தொழிற்சாலையை மத்திய சர்க்கார் ஆரம்பிக்கப்போகிறார்கள் என்று சொன்னார்கள், இப்போது அதற்கான பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள், இதற்கான பூர்வாங்க வேலை

[Sri P. U. Shanmugam] [10th November 1961

ஆரம்பித்துவிட்டது என்று சொல்லப்படுகிறது, ஆனால் இதுவரையிலும் தொழிற்சாலை நிர்மாணிக்கப்படவில்லை. வடநாட்டில் எடுத்துக்கொண்டால், நேற்று திட்டத்தை சொல்கிறார்கள், இன்று திட்டத்தை நடத்துகிறார்கள், ரூர்கேலாவில் ஏற்படுத்தினார்கள், பிலாயில் ஏற்படுத்தினார்கள், துர்க்காபூரில் ஏற்படுத்தினார்கள். இந்த இடங்களில் எல்லாம் தொழிற்சாலைகளை ஏற்படுத்துவதற்கு கிழக்கு ஜெர்மனியிலோ அல்லது இத்தாலியிலோ இவ்வளவு கால தாமதம் ஆகவும் இல்லை, இத்தனை சோதனைகள் நடைபெறவும் இல்லை. ஏன் நெய்வேலிக்கும், சேலத்திற்கும் இந்தகதி ஏற்பட்டிருக்கிறது? இந்த இடங்கள் தென்னகத்திலுள்ள இடங்கள் என்ற ஒரு காரணத்தைத் தவிர வேறு என்ன இருக்க முடியும் என்று முறைப்படி கேட்கிறேன். உண்மையாக சொல்லப்போனால் தென்னகத்தில் தொழிற்சாலைகளை ஏற்படுத்தித் தருவதில் மத்திய சர்க்கார் போதிய கவனம் செலுத்தவில்லை. வடநாட்டோடு போதிய அளவில் நாம் சண்டை போட்டு நமது பங்கை வாங்க வேண்டும் என்று கனம் சின்னத்துரை அவர்கள் சொன்னார்கள். எதிர்க்கட்சிகள்தான் சண்டை போடுவார்கள் என்று ஆளும் கட்சியிலுள்ள சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். நாங்கள் சண்டை போடுகிறோமா இல்லையா என்பது வேறு விஷயம். ஆனால் இந்த அரசாங்கம் வாங்கியிருக்கின்ற தொகை மிக மிக குறைவான தொகை. நியாய அடிப்படையில் பார்த்தாலும் சரி, ஜனத்தொகை அடிப்படையில் பார்த்தாலும் சரி, இப்போது கிடைத்திருப்பதை காட்டிலும் கூடுதல் கிடைத்திருக்கவேண்டும். அதுவும் இல்லை. இந்த நிலையில் இவர்கள் ஆயிரம் கோடி கேட்கின்றார்கள். இது வெறும் விதண்டாவாதம் என்று சொல்லுவது எந்த அளவுக்கு பொருந்தும் என்று கேட்கிறேன். உணவு உற்பத்தியைப் பொறுத்த மட்டில் கொடுக்கப்பட்டிருக்கின்ற புள்ளிவிவரங்களை எடுத்துக் கொண்டாலும் சரி, மற்ற தொழில்கள் சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்களை எடுத்துக்கொண்டாலும் சரி, இவற்றில் எந்த புள்ளி விவரத்தைக்கொண்டு மக்களை திருப்தி செய்யப்போகிறீர்கள். இது சம்பந்தமாக கொடுத்திருக்கும் இரண்டு புத்தகத்திலுள்ள புள்ளி விவரங்களை எல்லாம் துருவித் துருவிப் பார்த்தேன். ஓரிடத்தில் அமோனியம் சல்பேட் உரத்தோடு இன்னொரு உரத்தையும் சேர்த்து உபயோகிப்பதாயிருந்தால் இரண்டு லட்சம் டன் உற்பத்தி செய்ய முடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் இருபது சதவிகிதம் "ஓவர்லாப்பிங்" என்று குறைத்திருக்கிறார்கள். இன்னும் வேடிக்கையாக இருப்பது, முன்னால் இருபது சதவிகிதம் குறைத்திருப்பதை இப்போது ஐந்து சதவிகிதம் குறைத்திருக்கிறார்கள். நம்முடைய தேவை என்று சொல்லப்படுவது 16. ஆகவே 20.93 என்பதிலிருந்து ஐந்தை குறைத்து 16 என்று காண்பித்துவிட்டார்கள். ஆனால் ஏன் இந்த ஐந்து சதவிகிதத்தை நகல் திட்டத்தில் குறைக்கவில்லை என்று தெரியவில்லை. ஆனால் இப்போது 1.6 என்று முடிவாக குறைத்திருக்கிறார்கள், இதற்கு காரணம் என்ன? அப்படி முன்னால் இருந்தது போலவே ஐந்து என்று குறைத்தால் இப்போது பற்றாக் குறையைக் காட்ட வேண்டும். இதை மாற்றுவதற்குதான் இவ்விதம் புள்ளிவிவரம் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர வேறு

10th November 1961] [Sri P. U. Shanmugam]

என்ன காரணம் இருக்கமுடியும்? இது ஏமாற்று வித்தையைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உணவு உற்பத்தியைப் பொறுத்தவரையில், உணவு உற்பத்திக்குப் போதிய வழிவகை செய்யப்படவில்லே, விவசாயத்திற்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கும் பணம் போதாது. நியாயப்படி, முறைப்படி நமக்கு கிடைத்திருக்கும் தொகை மிக மிக குறைவு என்பதைக் கூறி, இதற்காக கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளிவிவரங்கள் வெறும் ஏமாற்றுவித்தைதான் என்றும் கூறி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**Sri M. A. MUTHIAH CHETTIAR** : தலைவர் அவர்களே, மூன்ருவது திட்டத்தைப்பற்றி பேசும்போது, இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியிருப்பதைப்பற்றி நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த பத்து வருடகாலமாக கூடிய வரை மக்களுக்கு அனுகூலமாக பல நல்ல காரியங்கள் செய்திருப்பதை நாம் பாராட்ட கடமைப்பட்டிருக்கிறேம். பொதுவாக திட்ட விஷயமாக நமது மந்திரிகள் டெல்லியில் போய் இன்னும் அதிகம் கேட்டு வாங்குவதற்கு நாம் இங்கு கூறுகிற கருத்துக்கள் உதவிகரமாக இருக்கும். இங்கு நாம் கொஞ்சம் கடுமையாக பேசியிருந்தாலும் அது நன்மையாகத்தான் இருக்கும் என்பது என் அபிப்பிராயம். டெல்லியில் என்ன செய்கிருர்கள் என்ருல், உத்திர பிரதேசம் போன்ற இடங்களிலுள்ள மந்திரிகள், சட்டசபை அங்கத்தினர்கள் இவர்கள் அடிக்கடி டெல்லிக்குப் போய் மத்திய சர்க்காரில் யாரையாவது பார்த்து, விஷயங்களை சொல்லிவிட்டு பத்திரிகைக்காரர்களை அழைத்து செய்தியையும் கொடுத்துவிடுகிருர்கள். பத்திரிகையில் "மாட்டர் இஸ் ரிஸீவிங் அட்டன்ஷன்" என்று செய்தியும் வந்துவிடுகிறது. இப்படி அடிக்கடி தங்கள் கோரிக்கைகளை கேட்டுக்கொண்டிருக்கிருர்கள். இந்த திட்டத்தைப் பொறுத்தவரையில் ஹைட்ரோ எலக்ட்ரிக் ஸ்கீம்-க்காக அதிகமான பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்போது பரம்பிக்குளத் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் 24 கோடி ரூபாய் போதாது என்றுதான் நினைக்கிறேன். இதைப்பற்றி இன்னும் பல தடவை டெல்லியில் சொல்லுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. நான் பல தடவை இந்த மன்றத்தில் சொல்லி வந்திருக்கும் திட்டமானது, காவேரியில் இரண்டு அணைகள் கட்ட வேண்டும் என்பதைப்பற்றியது. இனிமேல் மைசூரில் தண்ணீர் இல்லே என்று சொல்ல முடியாது. அந்த அளவுக்கு சமீபத்தில் வந்த வெள்ளம் நமக்கு எடுத்துக்காட்டிவிட்டது. திருச்சிராப்பள்ளியிலிருந்து தனுஷ்கோடி வரையிலும், மதுரைக்கு கிழக்கேயுள்ள ஜனங்களும் இப்போதும் பலவிதத்தில் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிருர்கள். அதோடு ஈரோடு, ஜேடர்பாளையம் அருகே ஓர் அணையை கட்டலாம் என்று முன்பு சொல்லப்பட்டிருக்கிறது. ஹொகனேக்கல் அருகிலும் ஓர் அணையை கட்டலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு இரண்டு அல்லது மூன்று கோடி ரூபாய் ஆகும். ஆகவே இந்த அணைக்கட்டுகளை நான்காவது திட்டத்திற்கு மாற்றிவிடாமல், இந்தத் திட்டத்திலேயே சேர்க்கலாம். இதற்காக இந்த வருடத்திலேயே இன்வெஸ்டிகேஷன்

[Sri M. A. Muthiah Chettiar] [10th November 1961

செய்ய ஆரம்பிக்கலாம். இதற்கெல்லாம் தடையாக 1975-ம் ஆண்டு வரையிலும் முன்பு மைசூர் ராஜ்யத்தோடு செய்த ஒப்பந்தம் இருந்து கொண்டிருக்கிறது என்று சொல்லுகிருர்கள். அப்படியாளுல் இன்னும் எவ்வளவோ காலம் காத்துக்கொண்டிருக்க வேண்டும். இப்போது எவ்வளவோ பெரிய வெள்ளம் வந்தது. இது 1975-யையோ அல்லது 85-யையோ பார்த்துக்கொண்டு வரவில்லை. நல்ல வேளையாக சோழராஜன் காலத்தில் பெரிய அணையை கட்டி பல கால்வாய்களை வெட்டியதன் காரணமாக ஓரளவுக்கு நம்மால் காப்பாற்ற முடிந்தது. ஆகவே, இந்த இரண்டு அணைகளையும் கட்டுவதற்கு இப்போதிருந்தே நடவடிக்கை எடுத்தால்தான் அடுத்தத் திட்ட காலத்திற்குள்ளாவது முடிவடையும். ஆகவே இதை மந்திரி சபையார் முக்கியமாக எடுத்துக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். இப்போது டெல்லியில் "ஃப்லட் கன்ட்ரோல் கமிஷன்" ஒன்று இருக்கிறது. அந்தக் கமிஷனை வரவழைத்து இவைகளை எல்லாம் காட்டி இந்த இரண்டு அணைகளையும் கட்டவேண்டும் என்று சொன்னால் சந்தேகமில்லாமல் அவர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். இந்த அணையைக் கட்டினால்தான் நான் முன்னால் சொன்ன பகுதிகளுக்கு தண்ணீர் வசதி கிடைக்கும். சேலத்திலும் ஒரு பகுதிக்கு தண்ணீர் கிடைக்கும் என்று நம்புகிறேன். இதைப்பற்றி யாருக்கும் புதிதாக சொல்ல வேண்டியதில்லை. இப்போதுள்ள மந்திரி சபையிலுள்ள கனம் காமராஜர், கனம் ராமையா, கனம் கக்கன் போன்றவர்கள் இதை நன்கு அறிவார்கள். இதற்காக நிதி வாங்கித் தருவதற்கு நிதி அமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள். நமது சபையிலுள்ள மூன்று மந்திரிகளே அந்த இடத்திற்கு எல்லாம் வந்திருக்கிறார்கள். அவர்கள் நேரில் நிலைமைகளை எல்லாம் அறிந்திருக்கிறார்கள். அவர்களே நமக்கு போதுமான சாட்சியாக இருக்கிறார்கள். அந்த இடங்களில் எல்லாம் நெல் விளைவது என்பதே கிடையாது. பஞ்சத்தைத் தவிர அந்த இடத்தில் ஒன்றுமில்லை. இவைகள் எல்லாம் உண்மையான விவரங்கள். அப்படியில்லை என்றால் நான் மன்னிப்பு கேட்டுக்கொள்ளவும் தயாராய் இருக்கிறேன். இதையெல்லாம் மந்திரி சபையினர் ஆலோசித்துப் பார்த்து தக்க நடவடிக்கை எடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

கல்வி விஷயமாக, நான் அதிகமாக இங்கு பேசியதில்லை. இப்போதுள்ள அரசாங்கம் பல நன்மைகளை செய்திருக்கிறது. நமது கல்வி அமைச்சர் அவர்கள் பல நல்ல வேலைகளை செய்திருக்கிறார்கள். கோடிக்கணக்கான மக்களுக்கு படிப்பதற்கு வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். மதிய உணவு வசதி (மிட்டே மீல்) செய்து கொடுத்திருக்கிறார்கள். ஆனால் பொதுவாக பள்ளிகளில் தரம் இன்னும் உயரவில்லை. டீச்சர்களுக்கும் ஸ்டூடென்ட்களுக்கும் இன்னும் பழக்கமான (யூஷ்வல்) பிளாட்பார்ம் பேச்சுத்தான் இருந்து கொண்டிருக்கிறது. காரணம் நேற்று டிரைனிங் படிக்கிறார்கள், அடுத்தநாள் டீச்சராக வந்துவிடுகிறார்கள். ஆனால் இப்போதுள்ள குழந்தைகள் முன்னைவிட புத்திசாலித்தனமுள்ளவர்களாகத்தான் இருக்கிறார்கள். அதில் எந்தவிதமான குறையும் இல்லை. ஆனால் **"He is not fit enough to read".** இந்த

10th November 1961] [Sri M. A. Muthiah Chettiar]

நிலேதான் இருந்துகொண்டிருக்கிறது. அவர்கள் எவ்வளவோ படிக்கக்கூடியவர்கள். இன்றைய தினம் பார்த்தால் ஹோம் எக்ஸெர்ஸைசஸ் கிடையாது. மனப்பாடம் பண்ணுவதே கிடை யாது. எஸ்.எஸ்.எல்.ஸி.-யிலே 100 லேன் இங்கிலீஷ் பொயட்ரி, 100 லேன் தமிழ் பொயட்ரி மனப்பாடம் செய்யவேண்டுமென்பது கிடையாது. இன்னும் டீச்சர்ஸ் டிரைனிங்கில் முக்கிய கவனம் செலுத்தவேண்டும். இதிலே டீச்சர்ஸ் டிரைனிங்குக்கு ஏதாவது புது ஏற்பாடுகள் செய்திருக்கிறார்களா என்று பார்த்தேன். டிரை னிங் ஃபெஸிலிட்டீஸ் ஏற்படுத்த கோடிக் கணக்கில் ஒன்றும் செலவு ஆகாது. 10 லட்சம் ரூபாய் அளவுக்குத்தான் வரும். இதை திட்டத்திலே சேர்க்காமலேயே கூட செய்து விடலாம். சமீபத்திலே 5-6 மாதங்களாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். உபாத்தியாயர்களின் தரத்தை உயர்த்தவேண்டுமென்று சமீப காலத்தில் எல்லோராலும் பேசப்பட்டு வருகிறது. உபாத்தியாயர் களுடைய தரத்தை உயர்த்தவேண்டுமென்று சொல்லும்போது, அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தவேண்டுமென்று அர்த்த மல்ல. சம்பளத்தைத்தான் இப்போது நாம் உயர்த்தியிருக் கிறோமே. உபாத்தியாயர்களுடைய சொல்லிக்கொடுக்கும் தரத்தை உயர்த்த வேண்டுமென்று பல இடங்களில் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் டிரைனிங்கை இரண்டு வருஷ மாகச் செய்யவேண்டும்—பி.டி. டிரைனிங்கை இரண்டு வருஷ மாகச் செய்ய வேண்டும். நல்ல முறையில் டிரைனிங் ஏற்படுத்த வேண்டும். நான் ஒரு யோசனையைத் தெரிவிக்க விரும்புகிறேன். அதாவது ஒரு ஸிலபஸ் எக்ஸிபிஷன் வைத்தால் நலமாக இருக்கும். அதை இங்கேயே வைத்தால் கூட நல்லது. 1920-ம் வருஷம் முதல் 1961-ம் வருஷம் வரையில் இந்த 41 வருஷத்தில் இருந்த ஸிலபஸ், எஸ்.எஸ்.எல்.ஸி. வகுப்பு வரையில் இருந்த டெக்ஸ்ட் புக்ஸ் ஆகியவைகளை ஒரு எக்ஸிபிஷனுக வைத்தால் ரொம்பவும் பயனுள்ளதாக இருக்கும். முன்பு 20 இன்ச் இருந்தது இப்போது ½ இன்ச் ஆக மாறி குறைந்திருக்கிறது. முன்பு 2¾ ரூபாய் போட்டு வாங்கியது இன்றைக்கு 37¾ ரூபாய் ஃபர்ஸ்ட் ஃபாரம் பையனுக்கு வேண்டிய புத்தகங்களை வாங்கு வதற்குச் செலவாகின்றது. டிஸ்ட்ரிக்ட் போர்டில் அந்தக் காலத் தில் ஒருவரை விட்டு எழுதச் சொல்லி 200 ரூபாய் எழுதிய வருக்கும், அச்சுப் போட்டவர்களுக்கும் 200 ரூபாயும் கொடுத்து வெளியிட்டால் கடைசியில் ஒன்றும் மிஞ்சாது. இன்றைய தினம் பார்த்தால் இந்த டெக்ஸ்ட் புக் போடுவதில் என்னென்னவோ கூத்து இருக்கிறது. ஒரு புத்தகம் போட்டால் எழுதியவருக்கு பணம் கொடுத்து, அச்சுக்காரர்களுக்கு பணம் கொடுத்து அதிலே ஆயிரக் கணக்கான ரூபாய் லாபம் கிடைக்கிறது. இப்போது ஒரு டெக்ஸ்ட் புக் கிடைத்தால் போதும் என்ற நிலே இருக்கிறது. இது எல்லோருக்கும் தெரிந்தது தான். எல்லோருக்கும் தெரிந்ததைத் தான் சொல்லுகிறேன். இன்றைய தினம் நாட்டிலே கிழவர்கள் இருக்கிறார்கள் 60-65 வயதாகக் கூடியவர்கள் இருக்கிறார்கள். அவர் களை 5 வருஷத்திற்கு ரீ-எம்ப்ளாய் செய்து ஒரு கமிட்டி ஏற்படுத்தி இங்கே பங்காவிற்குக் கீழே உட்கார்ந்து கொண்டு ஒரே ஆர்டர்

[Sri M. A. Muthiah Chettiar] [10th November 1961

போட்டு விடுங்கள். 1930-ம் வருஷத்திய ஸிலபஸ் அப்படியே வர வேண்டுமென்று சொல்லுங்கள்—வேலை சுருக்கமாக முடிந்து விடும். முதலில் இதை ஃபர்ஸ்ட் ஃபாரமிலிருந்து ஆரம்பிக்கலாம். இப்போது கடுமையான படிப்பு இல்லை. அதுதான் காரணம். வேறு காரணம் ஒன்றும் கிடையாது. பையன்கள் படிக்கத் தயாராக இருக்கிறார்கள். பழைய திட்டத்திற்கு மறுபடியும் போனால் தேவலை. யூனிவர்ஸிட்டியை எடுத்துக்கொள்ளுங்கள். அதுவும் அப்படித்தான். வட இந்திய யூனிவர்ஸிட்டிகளை விட நம் யூனிவர்ஸிட்டி முன்னணியில் நிற்கலாம். மதராஸ் யூனிவர்ஸிட்டியின் தரம் 100-க்கு 20 பங்குதான் குறைந்திருக்கிறது. வடக்கே 50 பங்கு குறைந்திருக்கிறது என்று ஸாடிஸ்ஃபேக்ஷன் இருக்கலாம். வர வர தரம் உயர வேண்டும். இப்போது அதனுடைய தரம் 120% ஆவது இருக்கவேண்டும். எத்தனையோ இடங்களில் திரு. லட்சுமணசுவாமி முதலியாரைப் பற்றி புகழ்ந்து பேசுகிறோம், நம்முடைய யூனிவர்ஸிட்டி தரத்திலே நாட்டிலேயே முதலாவதாக இருக்கிறது என்று சொல்லுகிறோம். எம்.ஏ. வாத்தியாரை வசனம் என்ன படித்திருக்கிறீர்கள் என்று கேட்டால் அவர் என்ன என்று தெரியாமல் விழிக்கிறார். தமிழ் எம்.ஏ. வாத்தியாரைப்பற்றித்தான் சொல்லுகிறேன். பிறகு டமில் ப்ரோஸ் என்று சொன்னால் தான் தெரியும். எம்.ஏ. படிப்பு இப்படி இருக்கிறது. வித்வான் படிப்பு படித்தவர்கள் தான் எம்.ஓ.எல். கிளாஸுக்குப் போகவேண்டும் என்று இருக்கவேண்டும். ஸ்டாண்டர்ட் குறைந்து போய் விட்டது என்பது இன்றைக்கு ப்ளாட்ஃபார்ம் ஸ்பீச் ஆகி விட்டது. இதைப்பற்றி மணிக்கணக்காகப் பேசலாம். இதோடு நிறுத்திக் கொள்கிறேன். (ஸ்ரீ. கே. விநாயகம்: மீடியம் ஆஃப் இன்ஸ்ட்ரக்ஷன் . . . ?) மீடியம் ஆஃப் இன்ஸ்ட்ரக்ஷனைப் பொறுத்த வரையில் செனெட் ஹவுஸில் இந்த சபை கூடிய போது 1937-ம் வருஷம் கம்பல்ஸரி ஹிந்தி வந்தபோது அப்போது லீடர் ஆஃப் தி அப்போஸிஷனாக இருந்த நான் அப்போதே எனது கருத்தை சொல்லியிருக்கிறேன்.

'I oppose compulsory introduction of Hindi, but I welcome introduction of Hindi on a voluntary basis which has better chances of success in this part of the country and in the same breath I demand retention of English for all time to come.'

இன்றைக்கு நான் சொல்லவில்லை. இங்கிலீஷ் மீடியம் வேண்டுமென்று எப்போதுமே சொல்லத் தயங்கியதில்லை. 25 வருஷத்திற்காவது இங்கிலீஷ் வேண்டும். எஞ்சினீயர்கள், டாக்டர்கள் ஆகிய துறைகளில் இங்கிலீஷ் மீடியம் கட்டாயம் வேண்டும். ஹிந்தி புஸ்தகங்கள் வருவதற்கே 10 வருஷங்கள் ஆகும். இங்கிலீஷை ஒழித்தால் தான் தமிழ் வரும் என்று சொல்லக்கூடிய கட்சி இருக்கிறது. முதலில் நேரு சொல்லி விட்டார், டெக்னிக்கல் எடுகேஷனுக்கும், எஞ்சினீயரிங் எடுகேஷனுக்கும் இங்கிலீஷ் வேண்டுமென்று. பிறகு சமீபத்திலே யூனிவர்ஸிட்டி எடுகேஷனுக்கும் இங்கிலீஷ் வேண்டுமென்று சொல்லி விட்டார். அதன் பிறகு தைரியமாக காங்கிரஸ்காரர்கள் இங்கிலீஷ் வேண்டுமென்று சொல்லலாம். நமது கல்வி மந்திரியும் இங்கிலீஷ் மீடியம் பற்றி

10th November 1961] [Sri M. A. Muthiah Chettiar]

ஆட்சேபணை செய்யவில்லை. ஒரு இடத்தில் அவரே சொல்லியிருக்கிருர். இங்கிலீஷ் சொல்லிக் கொடுக்க நல்ல உபாத்தியாயர்கள் இருந்தால் ஸ்பெஷல் கிராண்டு கொடுக்கிறேன் என்று சொல்லியிருக்கிருர். இங்கிலாந்திலேயே இங்கிலீஷ் ஸ்டாண்டர்ட் குறைந்து விட்டது என்று அவர்கள் வருத்தப்படுகிருர்கள். இங்கிலீஷ் சொல்லிக் கொடுக்க இங்கே ஸ்பெஷலாக வெள்ளைக்காரர்கள் வரப்போவதில்லை. 55 வயதுக்கு மேல் 70 வயது வரை உள்ளவர்கள் 1,000 அல்லது 500 பேர்கள் இருக்கிருர்கள். இவர்களை ப்ரெஸிடென்ஸி காலேஜ் உட்பட நியமித்து எல்லா ஹைஸ்கூல்களிலும் சொல்லித் தர ஏற்பாடு செய்து அவர்களை எம்ப்ளாய் செய்யவேண்டும். ஒவ்வொரு ஹைஸ்கூலிலும் இங்கிலீஷ் மீடியம் செக்ஷன் ஒன்ருவது நிச்சயமாக இருக்க வேண்டும். ஹிந்திக்காக அவர்கள் எவ்வளவு வேண்டுமாளுலும் செலவழிக்கட்டும்—அதைப் பற்றி நாம் கவலைப் படவேண்டியதில்லை. இதிலே இன்னென்று வரப் போகிறது, அதுதான் தேவநாகரி ஸ்கிரிப்ட். இனிமேல் தமிழ் முதல் தேவநாகரி ஸ்கிரிப்டில் தான் எழுதவேண்டியிருக்கப் போகிறது. இங்கிலீஷை நாம் எவ்வளவு காப்பாற்றுகிருேமோ அவ்வளவுக்கவ்வளவு தேவநாகரி ஸ்கிரிப்ட் வராமல் இருக்கும். இல்லாவிட்டால் தமிழ் உட்பட எல்லாவற்றையும் தேவநாகரி ஸ்கிரிப்டில் எழுத வேண்டிய நிலைமை ஏற்படும். அமைச்சர் அவர்கள் ரோமன் ஸ்கிரிப்ட் பற்றி சொல்லியிருக்கிருர். இங்கிலீஷ் இல்லாவிட்டால் ரோமன் ஸ்கிரிப்ட் கூட மைனுரிட்டியாக ஆகிப் போகும்—ரோமன் ஸ்கிரிப்ட் கட்சி கூட ஜெயிக்காது என்று பயமாக இருக்கிறது. தேவநாகரி ஸ்கிரிப்டுக்கு 500 பேர்கள் இருந்தால் ரெஸொலூஷன் பாஸ் ஆகிவிடுகிறது. ரெஸொலூஷன் பாஸாகி விட்டால் நாம் என்ன துப்பாக்கியை எடுத்து சுடப் போகிருேமா ?—அது கிடையாது. நான் இதைப் பற்றிப் பேசுவதாகவே இல்லை—கனம் அங்கத்தினர் பேசச் சொன்னதால் இவ்வளவு தூரம் பேசி விட்டேன். நான் இதைப் பற்றி எனது குறிப்பில் கூட எழுதி வைக்கவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர் பயந்து பேசுவதாகச் சொன்னுர். தேவநாகரி ஸ்கிரிப்ட் நிச்சயம் ஜெயிக்காது என்று நான் இப்போதே உறுதியாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

SRI M. A. MUTHIAH CHETTIAR : இந்த மட்டில் இப்போதைக்கு சந்தோஷம். பிறகு எப்படி ஆகப்போகிறதோ . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் இங்கு இருக்கும் வரையில் நிச்சயமாக வராது என்று சொல்லிக் கொள்கிறேன்.

SRI M. A. MUTHIAH CHETTIAR : அவர்கள் இங்கேயே மந்திரியாக இருக்கப் போவதில்லை. இங்கிருந்து டில்லிக்கு 100 பேர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிருேம். அவர்கள் பேசுவதே கிடையாது. டில்லியில் அவர்கள் பேசி இருந்தால் இந்தத் திட்டத்திற்கு நமக்கு கிடைத்திருப்பது 291 கோடியாக இருக்காது, 591 கோடியாக இருந்திருக்கும். நாம் இங்கிருந்து

[Sri M. A. Muthiah Chettiar] [10th November 1961

பேசாதவர்களைத் தானே அனுப்பியிருக்கிறோம். (சிரிப்பு) காங்கிரஸ் பார்ட்டி மட்டுமல்ல, எல்லா கட்சிகளும் அப்படித்தான். பேசாமல் இருப்பது தான் முக்கிய கவாலிபிகேஷன். இனிமேலாவது அவர்கள் பேசுவார்கள் என்று நினைக்கிறேன். கனம் மந்திரி அவர்கள் அங்கு போனால் பார்லிமெண்ட் மெம்பர்கள் கூட அவர்களைப் பார்ப்பதில்லை. அவர்களைப் பார்த்து அவர்களுடைய கையை வலுப்படுத்தலாம். அதுவும் செய்வதில்லை.

மற்றபடி அவர்கள் சென்னை நகரைச் சுற்றி ஸாடிலைட் டவுன்ஸ் ஏற்படுத்துவதாகச் சொல்லியிருக்கிறார்கள். ஸ்லம் க்ளியரன்ஸுக்கு 5 வருஷங்களுக்கு மூன்று கோடி போட்டிருக்கிறார்கள். சென்னை நகரம் மட்டுமல்ல, ஒவ்வொரு ஊரிலும், பஞ்சாயத்து ஏரியாவிலே கூட ஸ்லம் இருக்கிறது. இதை ஒரேயடியாகச் செய்ய முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத் தான் செய்ய வேண்டும். நாம் ஸ்லம் க்ளியரன்ஸ் செய்ய வேண்டும், அதே நேரத்தில் புதுப் புது ஸ்லம்களும் வந்துகொண்டே இருக்கத்தான் செய்யும். ஆகையால் இந்தத் தொகையைக் கூடுதலாக்கவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் இதைச் சரிவரப் படிக்கவில்லை, நான் சொல்லுவதில் ஏதாவது தவறுதல் இருந்தால் மன்னிக்க வேண்டும், வெட்டனரி காலேஜ்களை இன்னும் அதிகமாக்க வேண்டும். ஒரு காலேஜ் ஏற்படுத்தப் போகிறார்கள் என்று நினைக்கிறேன். குறைந்தது இரண்டு காலேஜ்களாவது ஏற்படுத்த வேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். பொதுவாக, இந்த அளவுக்கு 290 கோடி ரூபாய் அளவுக்கு கிடைப்பதற்காவது ஏற்பாடு செய்ததுபற்றி உண்மையிலேயே நான் பாராட்டுகிறேன். இல்லாவிட்டால் அந்தத் தொகையும் வந்திருக்காது. சண்டை போட்டதால்தான் 290 கோடியாவது கிடைத்தது. இல்லாவிட்டால் முன்பு 180 கோடி, இப்போது 210 கோடி என்றுதான் வந்திருக்கும். இன்னும் இந்த ஐந்தாண்டுக் காலத்திலே இத் தொகையையும் கூடுதலாக்க வேண்டும்.

12-30 p.m.

முக்கியமாக, நாம் பெரிய இர்ரிகேஷன் ஸ்கீம்களைத்தான் போடுகிறோமே தவிர, சின்னச் சின்ன இர்ரிகேஷன் ஸ்கீம்களை எடுத்துக் கொள்வது இல்லை. நான் இதைப்பற்றி பல தடவை எடுத்துச் சொல்லி இருக்கிறேன். எந்தத் தாலூகாவை எடுத்துக் கொண்டாலும், இரண்டு சிறிய மலைகள் அங்கே இருக்கும். இதற்கிடையே உள்ள இடம் ஒரு சிறிய வால் போல் இருக்கும். அங்கே ஒரு அணை கட்டினால், 5,000, 10,000 ஏக்கர்களுக்கு வசதி செய்து கொடுக்க முடியும். இப்போது எல்லா ஜில்லாக்களுக்கும் இர்ரிகேஷன் ஸ்கீம் இருக்கிறது. நான் முந்தி இந்தச் சட்டசபையிலே சொல்லி இருக்கிறபடி, கோதாவரி, கிருஷ்ணா போன்ற நதிகளிலிருந்து தண்ணீரைக் கொண்டுவந்தால், இர்ரிகேஷன் ஸ்கீமை நல்ல முறையில் நிறைவேற்ற முடியும். அதிகப்படியாக உள்ள தண்ணீரைக் கொடுப்பதற்கு ஆந்திராவும் ஆட்சேபணை தெரிவிக்கவில்லை. காவேரி ஸ்கீமை நிறைவேற்றுவதற்காவது மைசூர் ஆட்சேபணை தெரிவித்தது. இப்போது நாம் ஆந்திராவோடு சுமுக

10th November 1961] [Sri M. A. Muthiah Chettiar]

மாக இருப்பதால், இதைச் சீக்கிரத்தில் நிறைவேற்றினல் நல்லது கோதாவரியிலிருந்து கிருஷ்ணவுக்கு தண்ணீர் விட்டு, கிருஷ்ணவி லிருந்து பெண்ணுற்றுக்குத் தண்ணீர் விட்டால், செங்கல்பட்டு, வட ஆற்காடு, தென் ஆற்காடு போன்ற மாவட்டங்களில் நல்ல பயன் ஏற்படும். இதைத் தவிர, சேலமும் உயர்வான இடத்திலே இருப்பதால், அதற்கும் எளிதாகப் பாசன வசதி கிடைத்துவிடும். காவேரி ஸ்கீம் போட்டு, அதோடு கோதாவரி, கிருஷ்ண ஸ்கீமும் நிறைவேறி, பரம்பிக்குளம் போன்ற ஸ்கீமும் முடிவடைந்து விட்டால், எல்லா ஜில்லாக்களுக்கும் பாசன வசதி நல்ல முறையில் ஏற்பட்டு விடும். இதை இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத் தில் எடுத்துக் கொள்வது என்பது கஷ்டம். நான்காவது ஐந்தாண் டுத் திட்டத்திலாவது எடுத்துக்கொண்டு, ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே முடித்தால் நன்ருக இருக்கும். இந்த அடிப்படை யில் திட்டங்களை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்தச் சமயத்திலே இவ்வளவு முயற்சி செய்து இந்தத் திட்டத்தை உருவாக்கியுள்ள சர்க்காருக்கு என் பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* SRI N. S. RAMALINGAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டசபை முன்பு வைத்திருக்கக்கூடிய மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை வரவேற்றும், கனம் கிருஷ்ண சாமி நாயுடு அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஆதரித்தும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நமது ராஜ்யத்தில் தேவைகளோ கட்டுக்கு அடங்கவில்லை. ஆனல் வசதி களோ மிகக் குறைவாக இருக்கிறது. இந்தக் குறைந்த வசதிகளை வைத்துக் கொண்டு, அதிகப் பலன்கள் கொடுக்கக்கூடிய பல திட்டங்களைப் போட்டு, அதிலே முதல், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களை நாம் வெற்றிகரமாக நடத்தியிருக்கிருேம். இப்போது மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் போடப்பட்டிருக்கிறது. ஆகவே, நாம் இந்த அரசாங்கத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்தத் திட்டம் போட்டிருக்கிற காலத்திலே, என் பிராந்தியத்திலே உள்ள சில முக்கியமான குறைகளை எடுத்துக் கூறி, அதற்கு எப்படி முக்கியத்துவம் கொடுக்க வேண்டும், முதலிடம் கொடுக்க வேண்டும் என்பதுபற்றி ஒரு சில வார்த்தை கள் சொல்ல விரும்புகிறேன்.

நாகப்பட்டினத்திலே 60 டன் உற்பத்தி செய்யக்கூடிய சூப்பர் பாஸ்பேட் உரத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு மத்திய அரசாங் கத்திற்குச் சிபார்சு செய்திருப்பதற்கு, நான் இந்த அரசாங் கத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அதோடு நன்றி செலுத்தவும் கடமைப்பட்டிருக்கிறேன். நமது நாட்டிலே இப்போது உரம் மிகவும் குறைவாக இருக்கிறது என்பது எல்லோரும் அறிந்ததே. ஆகவே, இம்மாதிரி சூப்பர் பாஸ்பேட் தொழிற்சாலை ஏற்படுத்துவது மிகவும் அவசியம். அதோடுகூட, இப்போது வருகின்ற உரங்கள் எல்லாம்கூட நாகப்பட்டினத் திற்கோ, தஞ்சை ஜில்லாவிலே உள்ள சில இடங்களுக்கோ வரவேண்டுமென்ருல், கடலூர், சென்னை ஆகிய இடங்களிலே இறங்கி அங்கிருந்து தஞ்சை ஜில்லாவுக்குக் கொண்டு

[Sri N. S. Ramalingam] [10th November 1961

வரப்படுகிறது. அதிலே ரயிலிலே இட நெருக்கடி ஏற்படுகிறது. அதோடுகூட, விவசாயிகளுக்கு விலையும் கூடுதலாகி விடுகிறது. இதையெல்லாம் தவிர்ப்பதற்கு, நாகப்பட்டினம் துறைமுகத்தை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்த்துக்கொண்டு அபிவிருத்தி செய்ய வேண்டியது அவசியம். அப்போதுதான் அங்கு உரம் கொண்டு வரப்பட்டு, விவசாயிகளுக்குக் குறைந்த விலையில் உரத்தை விநியோகிக்க முடியும். தவிர, ரயில் நெருக்கடியும் குறையும். இன்றைய தினம் செய்தித் தாளில், பிலாயிலிருந்து நாகப்பட்டினம் வரவேண்டிய இரும்புத் துண்டுகள் திருச்சிக்கு பிராட் கேஜ் மூலம் கொண்டு வரப்பட்டு, அங்கிருந்து நாகப்பட்டினத்திற்கு மீட்டர் கேஜ் மூலம் கொண்டு வர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்ற செய்தி வந்திருக்கிறது. ஆகவே, இதையெல்லாம் தவிர்ப்பதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே தூத்துக்குடி துறைமுகத்தைச் சேர்த்துக்கொள்ளும் போது, அதோடு இந்த நாகப்பட்டினம் துறைமுகத்தைப்பற்றியும் கவனம் செலுத்த வேண்டுமென்று நான் இந்த நேரத்திலே கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு, இன்னும் தஞ்சை ஜில்லா பின்தங்கிய பிரதேசமாக இருக்கிறது. எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் திரு. சீனுவாச அய்யர் அவர்கள் சொன்னபடி தஞ்சை ஜில்லா என்றாலே ஒரு தப்பு அபிப்ராயம் இப்போது இருந்து வருகிறது. அது எல்லா வளம் பொருந்திய ஜில்லா, அங்கே செழுமை கூத்தாடுகிறது என்று சொல்லப்படுகிறது. அப்படி முன்பு ஒரு காலத்தில் இருந்திருக்கலாம். ஆனால் இப்போது அது மிகவும் செழுமை குறைந்து காணப்படுகிறது. அதிலும் பல பின் தங்கிய பகுதிகள் இருக்கின்றன. புதுக்கோட்டை, ராமநாதபுரத்தோடு ஒப்பிடக்கூடிய வகையில் பல பகுதி இருக்கிறது. குறிப்பாக, கடற்கரை ஓரத்தைப் பார்த்தால் மிகவும் மோசமாக இருக்கிறது. கீழ்க் கடற்கரை செல்லும் சாலையை முதலில் எடுத்துக் கொண்டு, அதை நேஷனல் ஹைவேஸ் ரோடாகப் போடவேண்டும். இந்த ரோடு சென்னையிலிருந்து, ராமேஸ்வரம் வரையில் 6 ஜில்லாக்களில் செல்கிறது. அதிலும் வெள்ளக் காலங்களில் இந்தப் பகுதியிலே உள்ளவர்கள் நீந்தி வரவேண்டியிருக்கிறது. வேறு ரோடு வசதிகளே இங்கு கிடையாது. ரயில் வசதியும் கிடையாது. ஆகவே, கீழ்க் கடற்கரைச் சாலைக்கு முக்கியத்துவம் கொடுத்து, அதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நல்ல ரோடு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு, சென்ற வருஷம் இதே நவம்பர் மாதத்திலே வெள்ளம் வந்தது. வெள்ளம் எடுத்தபோது, மக்கள் ஊழியர்களான மராமத்து இலாகா மந்திரி அவர்களும், மின்சார இலாகா மந்திரி அவர்களும் அங்கு வந்து பார்த்தார்கள். அங்கு காரப்பிடாகை, சடயல் கோட்டகம் என்று ஊர் இருக்கிறது. அதன் நான்கு பக்கமும் நீர். வெள்ளம் வந்தபோது மக்கள் திருத்துறைப் பூண்டிக்கு நீந்தி வரவேண்டி நேர்ந்தது. அந்த இடத்திலே எல்லாம் போக்கு வரத்துக்கு உகந்த முறையிலே பாலம் கட்ட வேண்டும். அதோடு ரோடு வசதிகளும் செய்யலாம். இந்த

10th November 1961] [Sri N. S. Ramalingam]

இரண்டும் செய்தால், அந்தப் பகுதியில் போக்குவரத்து வசதி நல்லமுறையில் அமையும். அதற்கானத் திட்டம் போடவேண்டும். இதையும், இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எடுத்துக் கொண்டு, பாலமாவது, ரோட்டு வசதியாவது செய்து கொடுத்தால், அந்தப் பகுதியிலே உள்ள ஏழை மக்களுக்கு மிகவும் வசதியாக இருக்கும். ஆகவே, இதையும் போடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு, கடல் ஓரப் பகுதியில் நீர்ப்பாசன வசதியும் சரியான முறையில் இல்லாமல் மானுவாரியாக இருந்து கொண்டிருக்கிறது. ஆனுல், அங்கு நீர்ப்பாசன வசதிக்கு இடமிருக்கிறது. இப்போது விளைகைக் கடலுக்குப் போகும் நீரைத் தேக்கி, குறைந்த செலவில் அதாவது 5, 6 லட்சம் ரூபாய் செலவில் நீர்ப்பாசன வசதி செய்வதற்கு வசதி இருக்கிறது. அதற்குப் பலன் விரைவில் கிடைக்கக்கூடிய சாத்தியமும் இருக்கிறது. இந்தத் திட்டமானது 1958-லிருந்து அரசாங்கத்திலே பரிசிலனை செய்யப்பட்டு வருகிறது. அதாவது வேளாங்கண்ணி வடக்கு பொய்யூர், தெற்கு பொய்யூர், திருத்துறைப்பூண்டி, விழுந்த மாவடு போன்ற இடங்களில் வசதி இருக்கிறது, இதைத் தவிர, இன்னும் பல இடங்களில் பல திட்டங்கள் பரிசிலனையில் இருந்து வருகிறது. அவைகளையெல்லாம் இந்தத் திட்டத்திலேயே எடுத்துக் கொள்வதற்கு முக்கியத்துவம் கொடுத்து, நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் தஞ்சை ஜில்லாவுக்கு மின்சாரம் வேண்டுமென்று கேட்டால், ஏதோ வெளிச்சம் போட்டுக் கொள்வதற்காக மின்சாரம் கேட்பதாக நினைத்துக் கொண்டு, அங்கு மின்சாரம் விஸ்தரிக்கப்படாமல் இருக்கிறது. ஆனுல் அந்தக் கடற்கரை ஓரங்களிலே உள்ள பிரதேசங்களுக்கு மின்சாரம் கொடுத்தால், பாசன வசதியைப் பெருகிக் கொண்டு, சாகுபடியாளர்கள் விளைச்சலை அதிகப்படுத்துவதற்கு முடியும். ஆகவே, அந்தப் பகுதிகளுக்கும் மின்சாரம் விஸ்தரிக்கப்பட வேண்டுமென்று கனம் மின்சார அமைச்சர் அவர்களை நான் இந்தச் சபையிலுள்ள உதவி சபாநாயகர் அவர்கள் மூலமாக கேட்டுக்கொள்கிறேன். இதற்கும் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்னும் தஞ்சை ஜில்லாவிலே முந்திரித் தொழிற்சாலை ஏற்படுத்தலாம். ராஜ்யங்கள் பிரிக்கப்பட்ட பிறகு, நம்முடைய ராஜ்யத்திலே முந்திரிக்குத் தொழிற்சாலை கிடையாது. முந்திரிக்கு வல்லம் முந்திரியும், நாகப்பட்டினம் முந்திரியும் பெயர் போனது. இதை ஆராய்ந்து பார்த்து, ஆராய்ச்சி மூலம் இந்த முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த மூலப்பொருளை வைத்துக்கொண்டு, தொழிற்சாலை நிறுவினுல் அந்நிய செலாவணியும் கிடைக்கும். ஆகவே, இந்த நாகப்பட்டிணம் வட்டாரத்தில் முந்திரித் தொழிற்சாலை ஒன்றை நிறுவ பிரயாரிடி கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்னும் காவேரி ஓரத்தில் எண்ணெய் அகப்படுகிறது என்று சொல்லுகிறுர்கள். அதுபற்றி சீக்கிரம் ஆராய்ச்சி செய்து நல்ல எண்ணெய் அகப்படுமானுல் அங்கு எண்ணெய்

[Sri N. S. Ramalingam] [10th November 1961

சுத்தம் செய்வதற்கு ஒரு தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு கூடிய சீக்கிரம் முயற்சி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். தஞ்சை ஜில்லா விவசாய ஜில்லாவாக இருப்பதினால், மூன்றாவது திட்டத்தில் ஆரம்பிக்கப்பட இருக்கிற இரண்டாவது விவசாயக் கல்லூரியை அங்கு ஏற்படுத்த வேண்டும். அதோடுகூட கிராம பல்கலைக் கழகத்தையும் அங்கே ஏற்படுத்த வேண்டும். இதற்காகப் பாபநாசம் தாலூகாவில் ஒரு நண்பர் 1,000 ஏகர் நிலம் இனாமாக அரசாங்கத்திற்குத் தருவதாக முன் வந்திருக்கிறார். அதை பயன் படுத்திக்கொண்டு அங்கு விவசாயக் கல்லூரியையோ, கிராமாந்திர பல்கலைக் கழகத்தையோ ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதைத் தவிர தஞ்சை ஜில்லாவில் வேதாரண்யம், நாகப் பட்டிணம் போன்ற கடலோரப் பிரதேசங்களில் உப்பு அதிகமாகக் கிடைப்பதால் அதை வைத்துக்கொண்டு பல தொழிற்சாலைகள் அங்கே ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்ய வேண்டும். வேதா ரண்யம் பக்கத்தில் தீக்குச்சி செய்வதற்கு வேண்டிய மூலப் பொருள்கள் கிடைப்பதாக நிபுணர்கள் சொல்லுகிறார்கள். அதை ஆராய்ந்து பார்த்து அம்மாதிரி தொழிற்சாலைகளை நாகப்பட்டினம், திருத்துறைப்பூண்டி தாலூக்காக்களில் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நல்ல முறையில் நிறைவேறுவதற்கு நாம் எல்லோரும் ஒத்துழைத்து மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், பொருளா தார நிலைமையை உயர்த்துவதற்கும் வழிவகைகள் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த ஐந்தாண்டுத் திட்டத்தை வரவேற்று, திரு கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை ஆதரித்து, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.



DEPUTY SPEAKER : The hon. Member Sri K. Sattanatha Karayalar may now move his amendment.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"Add at the end the following—

and on such consideration this House recommends that the Government should give importance to the following schemes and projects :—

(i) Inter-State Irrigation Schemes for the utilisation of surplus waters of the rivers flowing in the adjoining States;

(ii) Steel Plant utilizing Salem iron ore and Neyveli Lignite;

(iii) Nuclear Power Station;

(iv) Sethusamudram Project and the development of Tuticorin as a Major Port;

(v) Extension of Railway lines; and

10th November 1961] [Sri K. Sattanatha Karayalar]

(vi) Exploration and establishment of an Oil Refinery in this State.''

SRI P. U. SHANMUGAM : I second the amendment, Sir.

SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் டெபுடி ஸ்பீக்கர், ஸார், நம்முடைய ஸ்டேட் ஐந்தாண்டுத் திட்ட புஸ்தகத்தில் 'இண்ட்ரொடக்ஷன்' என்ற பகுதியிலே சில விஷயங்களைச் சொல்லியிருக்கிறார்கள், சில விஷயங்களை விடப்பட்டிருக்கின்றன. முக்கியமாக மதராஸ் ஹார்பருக்கு கிட்டத்தட்ட 16 கோடி ரூபாய் வரையில் செலவு செய்யப்போகிறது, உலக பாங்கிலிருந்து நமக்குப் பண உதவி கிடைக்கிறது, 16 கோடி ரூபாய் செலவாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது ஒரு வரவேற்கத்தக்க அம்சம். அதே நேரத்தில் இந்த ராஜ்யத்திற்கு மூன்றாவது திட்டத்தின் மூலம் இன்னும் பெரிய நன்மைகள் எவ்வளவு கிடைக்கும் என்பதைப்பற்றிச் சொல்லவில்லை. முக்கியமாக ரயில்வேயை எடுத்துக் கொள்ளலாம். இந்த நாட்டில் ரயில்வே மூலம் போக்குவரத்து வசதி ரொம்பவும் அபிவிருத்தி அடைய வேண்டியிருக்கிறது. எங்கு பார்த்தாலும் பழைய கம்பெனி நிர்வாகத்தில் எந்த நிலைமையில் ரயில்வேக்கள் இருந்தனவோ அதே நிலைமையில்தான் ஓரளவுக்கு இருக்கிறது என்று சொல்லலாம். சேலத்திற்கும் மைசூருக்கும் ரயில்வே தொடர்பு. மற்றும் மானாமதுரைக்கும், விருதுநகருக்கும் என்று நினைக்கிறேன் தொடர்பு, மற்றும் கன்யாகுமரிக்கும் திருநெல்வேலிக்கும் இணைப்பு இப்படி முக்கியமான பாதைகளெல்லாம் போட வேண்டும் என்று சென்ற 40 வருஷ காலமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால் இதுபற்றி அடிக்கடி பத்திரிகையில் பார்ப்பது என்னவென்றால், இதோ வந்துவிடும், அதோ டெல்லியில் சொல்லியிருக்கிறது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கு சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது என்று இப்படியெல்லாம் செய்திகள் அடிக்கடி பத்திரிகைகள் மூலம் கேட்டுக் கேட்டு காது புளித்துவிட்டது, பார்த்துப் பார்த்துக் கண் மங்கிப் போய்விட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் நமக்கு என்னென்ன வசதிகள் கிடைக்கப் போகின்றன என்பதைப்பற்றித் திட்டவட்டமாகச் சொல்லப்படவில்லை. அன்னிய நாடுகளிலிருந்து 45 கோடி மக்கள் பெயரால் ஏராளமாக இந்தியா சர்க்காரால் கடன் வாங்கப்படுகிறது. அதில் நம்முடைய பங்குத் தொகை நமக்கு எவ்வளவு கிடைத்து பெரிய வேலைகள் நடக்கப்போகின்றன என்பதைச் சொல்லாமல் இருப்பது வாஸ்தவத்திலேயே நம்முடைய சென்னை சர்க்காருடைய ரொம்ப ஒரு . . (ஒரு கனம் அங்கத்தினர் : இயலாமை) இயலாமையைத்தான் அது குறிப்பிடுகிறது. அவ்வப்பொழுது வேண்டிய தமிழ் பதங்களை நீங்கள்தான் சொல்ல வேண்டும். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் : ஆங்கிலத்தில் சொல்லுங்களேன்). ஆங்கிலமும் அரைகுறைதான் (சிரிப்பு). அதற்கு நீங்கள் சட்டமன்றத்தில் ஜவாப் சொல்லுவீர்களோ என்னவோ எனக்குத் தெரியாது. நான் என்ன ஒரு பெரிய புள்ளியா? பெரிய பாயிண்டைச் சொல்லப் போகிறேன். அதற்கு நீங்கள் ஜவாப் சொல்லப் போகிறீர்கள். இப்பொழுது எலெக்ஷனில் ஜனங்களுக்கு நீங்கள் ஜவாப் சொல்லுவதற்கு

[Sri D. S. Authimoolam] [10th November 1961

இவைகளைத் திட்டத்தில் சேர்த்து விட்டோம் என்று சொல்லுவதற்கு ஏன் இப்போது இதில் நீங்கள் குறிப்புக் கொடுக்கவில்லை. திட்டத்தில் சேர்த்துவிட்டோம் என்று வெறுமனே பிளாட்பாரத்திலிருந்து சொல்லிவிடலாம் என்ற எண்ணமா? முதல் திட்டத்தில் 2,800 கோடி ரூபாய் என்று நினைக்கிறேன், இரண்டாவது திட்டத்தில் 4,800 கோடி ரூபாய், மூன்றாவது திட்டத்தில் 11,000 கோடி ரூபாய் இப்படிச் செலவழிக்கும்போது மக்கள் ஏராளமாக வரி கொடுக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கிட்டத்தட்ட மக்கள் 2,000 கோடி ரூபாய்க்குத் தேசம் பூராவும் வரி கொடுக்கப் போகிறார்கள். இன்னும் நோட்டு அடிக்கப் போகிறார்கள். இம்மாதிரியாகப் பணம் புரண்டு கொண்டிருக்கிற வேளையிலே, 1¼ கோடி ரூபாய் திட்டம் திருநெல்வேலி-கன்யாகுமரி லைன் 40 வருஷ கால மாகப் போட வேண்டுமென்று வற்புறுத்தப்பட்ட திட்டத்தை நிறை வேற்ற முடியாத நிலைமை இருக்கிறது என்று சொன்னால், அது நாட்டினுடைய துரதிருஷ்டம் தான். தமிழனுடைய துரதிருஷ்டம் தான் என்று சொல்ல வேண்டும். ஏன் பெரிய மந்திரி சபை இந்தியாவிலேயே பெரிய மந்திரி சபை என்று பிரமாதமாகச் சொல்லிக்கொள்ளுகிறீகள். ஏன் இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க முடியவில்லை? நான் எலெக்ஷனுக்கு நிற்கவில்லை. பொதுவாக நான் கேட்கிறேன். (கனம் ஸ்ரீ ஸி. சுப்ரமணியம்: அதை இப்பொழுது அனௌன்ஸ் பண்ணிவிட்டீர்களா?) ஆமாம், தினசரி ஏதாவது ஒரு பார்டி வந்து கேட்கிறார்கள். அதற்காகத்தான் அதை 'கன்பர்ம்' பண்ணி வைத்துவிடலாம் என்று பார்த்தேன்.

இன்னும் ஒன்றிரண்டு விஷயங்களைச் சொல்கிறேன். இந்தப் பெரிய புத்தகத்தில் இந்த ஐந்து வருஷங்களுக்கு ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் தமிழ நாட்டிலுள்ள மக்களுக்கு என்ன பெரிய சாதனைகளைச் செய்யப் போகிறீர்கள் என்பதைப்பற்றி சொல்லாமல் விட்டிருப்பது ரொம்ப வருந்தத்தக்க விஷயம்.

ரயில்வே போக்குவரத்து விஷயம் அப்படி இருக்கிறது என்று சொன்னால், ரோடு போக்குவரத்தை எடுத்துக் கொள்ளலாம். வடக்கு, தெற்கு என்று டி.எம்.கே. கட்சியினர் பேசுகிறார்கள். மற்ற மாகாணங்களில் திட்டம் எப்படி இருக்கிறது என்று நான் இன்னும் பார்க்கவில்லை. 'ஆல் இந்தியா ரிபோர்ட்' புஸ்தகத்தைப் படிக்கவில்லை. அதைப் படித்திருந்தால் இன்னும் சில விவரங்கள் தெரிந்திருக்கும். இந்தப் புஸ்தகத்தில் 116-வது பக்கத்தில், 'அட் தி பிகினிங் ஆப் தி பர்ஸ்ட் பிளானில்', 'டோடல் மைலேஜ் இன் தி ஸ்டேட்' ரோடுகளுடைய நீளம் 21,198 மைல். 'அட் தி எண்டு ஆப் தி செகண்டு பிளானில்' 25,867 மைல். ஆகையினால் கிட்டத்தட்ட 4,500 மைல் நீளமுள்ள ரோடுகளை 9 வருஷம், 10 வருஷத்தில் இந்த மாகாணத்தில் போட்டிருக்கிறீர்கள் என்று எடுத்துக் கொள்ளுவோம். (ஒரு கனம் அங்கத்தினர்: டெபுடி ஸ்பீக்கர் போட்டிருக்கிறார்?) பத்து வருஷங்களில் இந்த மாகாணத்தில் 4,500 மைல் நீளமுள்ள ரோடுகள் போட்டிருக்கிறீர்கள்—சர்க்கார். அப்படிப் பார்க்கும்பொழுது வருஷம் ஒன்றுக்கு 450 மைல் நீள

10th November 1961] [Sri D. S. Authimoolam]

முள்ள ரோடுகளைத்தான் நீங்கள்—சர்க்கார்—போட்டிருக்கிறீர்கள் அப்படி 450 மைல் என்று சொன்னால், இதிலே எத்தனையோ 'கிளாஸிபிகேஷன் ஆப் ரோட்ஸ்' இருக்கிறது. 'ஸ்டேட் ஹைவேஸ், நாஷனல் ஹைவேஸ், வில்லேஜ் ரோட்ஸ், அதர் டிஸ்டிரிக்ட் ரோட்ஸ், மேஜர் டிஸ்டிரிக்ட் ரோட்ஸ்' இப்படி இருக்கிறது. வருஷம் ஒன்றுக்கு 450 மைல் நீளம் உள்ள ரோடுகள் போட்டிருக்கிறீர்கள்? இந்த ராஜ்யத்தில் என்றால், ஒவ்வொரு ஜில்லாவிலும் எவ்வளவு போட்டிருக்கிறீர்கள் என்று 12-ஐக் கொண்டு வகுத்துப்பாருங்கள். எத்தனை மைல் நீளம் ரோடு போட்டிருக்கிறீர்கள்? (ஸ்ரீ டி. கரிய கவுண்டர்: 45 மைல் நீளம்) நீங்கள் 'கரெக்டாக' சொல்லுகிறீர்கள்! இந்த முறையில் வருஷம் ஒன்றுக்கு ஒரு ஜில்லாவிலே கிட்டத்தட்ட 50 மைல் நீளம் ரோடு கள்தான் போடுவதற்கு இந்தத் திட்டங்கள் மூலம் பணம் ஒதுக்கி இருக்கிறீர்கள் என்றால், இந்தப் பணம் எல்லாம் எங்கே போச்சு? அதுதான் என்னுடைய முக்கியக் கேள்வி. இது ஒரு மைனர் மாட்டர் என்று சொல்லி நீங்கள் நெக்லட் பண்ணிவிட முடியாது. வெள்ளைக்காரன் காலத்திலே ஒவ்வொரு ஜில்லாவிலும், ஜில்லா போர்டு மூலம் 150 மைல் நீளமுள்ள ரோடுகள் போடப்பட்டு வந்தன. வில்லேஜ் ரோடுகள், ஸ்டேட் ஹைவேஸ் என்று பல வகைகளில் 150 மைல் நீளம் ரோடு போட்டு வந்தார்கள். நீங்கள் கிராமங்களுக்குப் பல நன்மைகள் செய்து விட்டோம், பஞ்சாயத்துக்களை ஏற்படுத்தி விட்டோம், பஞ்சாயத்துத் தலைவர்களைப் பதவியில் வைத்திருக்கிறோம், அவர்களை மகாத்மாக்களாக வைத்திருக்கிறோம் என்றெல்லாம் சொல்லி மாநாடு நடத்துகிறீர்கள். அந்தக் காலத்தில் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் டோல்கேட் காம்பென்சேஷன் இவ்வளவு என்று நிர்ணயம் செய்து மோட்டார் வாகனங்கள் வரியிலிருந்து கொடுத்தார்கள். தஞ்சை ஜில்லா போர்டுக்கு 1½ லட்சம், கோயம்புத்தூர் ஜில்லா போர்டுக்கு 2 லட்சம் என்று இவ்வாறு கொடுத்தார்கள். அந்தக் காலத்தில் ஒரு ஜில்லாவில் 100 பஸ்களும், 50 லாரிகளும் 100 பிரைவேட் கார்களும் இருக்கும். ஆனால் இப்பொழுது எண்ணிக்கை 15 மடங்காக உயர்ந்து விட்டது. பழைய கணக்குப்படி பார்த்தால் இப்பொழுது ஒவ்வொரு ஜில்லா போர்டுக்கும் நிறையப் பணம் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் ஜில்லா போர்டுகளை இன்று அபாலிஷ் செய்தாகிவிட்டது. சென்ற 10 வருட காலமாக ஜில்லா போர்டுகளுக்கு ரோடுகள் போடுவதற்கு என்று மெயின்டினன்ஸ் கிராண்டோ, வில்லேஜ் ரோடு கிராண்டோ, காப்பிட்டல் வொர்க்ஸ்களுக்குக்கூட ஒழுங்காக நீங்கள் பணம் கொடுக்கவில்லை. ஜில்லா போர்டுகள் எப்படி நடந்து வந்தன? வெள்ளைக்காரன் காலத்தில் தஞ்சை ஜில்லா போர்டுக்கு ஒரு ரெயில்வே லயன் சொந்தத்தில் இருந்தது. அதேமாதிரி திருநெல்வேலி ஜில்லா போர்டுக்கு திருநெல்வேலி-திருச்செந்தூர் ரயில்வே லயன் இருந்தது. முப்பது லட்சம் ரூபாய் இருந்தது. எல்லாவற்றையும் விற்று விற்று எல்லாம் "கயா," ஆகிவிட்டது.

THE HON. SRI C. SUBRAMANIAM: சட்ட சபையில் பேசுகிறோம் என்பதை ஞாபகத்தில் வைத்துப் பேசுங்கள்.

[10th November 1961

Sri D. S. AUTHIMOOLAM : நான் கண்ணியக் குறைவாக நடந்து கொள்வதாக நினைக்க வேண்டாம். சர்க்கார் கணக்கிலிருந்தே 45 அல்லது 50 மைல் நீள ரோடுதான் போடப்பட்டது என்று தெரிய வருகிறது. இப்போது சமுதாய நலத் திட்டங்கள் மூலம் மண்ணை அள்ளிப் போட்டு ரோடு போட்டுவிடுகிறார்கள். அந்தக் கணக்கையும் சேர்த்துத்தான் ரிபோர்ட்டிலே சொல்லப்பட்டிருக்கிறது. இந்தமாதிரி நீங்கள் உங்களுடைய ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் என்ன செய்திருக்கிறீர்கள்? ஏதோ சில காரியங்கள் நடந்திருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. சில அணைகளைக் கட்டி இருக்கிறீர்கள். ஐந்தாண்டுத் திட்டமில்லை என்றாலும் கட்டித்தான் இருப்பீர்கள். கொஞ்சம் வேகமாக வேலை நடந்திருக்கிறது என்று சொல்லலாம். அதே சமயத்தில் "கிரிமினல் வேஸ்ட் ஆப் எக்ஸ்பெண்டிசர்" நடந்து கொண்டிருக்கிறது. கிட்டத்தட்ட 380 பிளாக்குகள் இருக்கின்றன. இவைகளுக்கு 380 ஜீப்கள், ஒவ்வொன்றுக்கும் தனித்தனி எஸ்டாபிளிஷ்மென்ட் என்ற முறையில் பணம் செலவாகி வருகிறது. "செத்தாடு கால் பணம், சுமை கூலி முக்கால் பணம்" என்ற முறையிலே நடக்கிறது. ஜனங்கள் தலையிலே வரியைப் போட்டு, இன்னும் கோடிக் கணக்கான பணத்தை கண்டுபிடிக்க வேண்டும். இந்த முறையிலே நிர்வாக அமைப்பு நடந்து கொண்டிருக்கிறது.

அதே நேரத்தில் இந்த நாட்டில் கவனம் செலுத்த வேண்டிய ஐடெம்கள் எவ்வளவோ இருக்கின்றன. டெக்னிகல் எஜுகேஷனில் கொஞ்சம் முன்னேற்றம் இருக்கிறது. ஆனால் சமுதாயம் வளர்ச்சியடையும் அளவுக்கு முன்னேற்றம் போதாது என்பது கனம் நிதி அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். அவர்கள் ஜெர்மனி போன்ற நாடுகளை எல்லாம் பார்த்து வந்திருக்கிறார்கள். ஐந்து கோடி ஜனத்தொகை உள்ள ஜெர்மனியில், பாலிடெக்னிக், மற்றும் டெக்னிகல் பள்ளியில் 12 அல்லது 13 லட்சம் பேர்கள் படிப்பதாகத் தெரியவருகிறது. அப்படியிருக்கும்போது, 3½ கோடி ஜனத்தொகை உள்ள நம் தமிழ் நாட்டில் கிட்டத்தட்ட 2,000 பேர்கள் படிக்கிறார்கள் என்று சொல்லிப் பெருமைப்படுவதில் அர்த்தம் இல்லை. அப்படி படிக்கிறவர்களுக்கு ஏதாவது சப்ஸிடி கொடுக்கிறார்களா என்றால், 100-க்கு 30 பேர்களுக்குத்தான் சப்சிடி கொடுக்கிறார்கள். இந்தப் பாலிடெக்னிக்களிலே படிக்கிறவர்களில் 85 சதவிகிதம் பரம ஏழைகள். பத்து ஆயிரம் பேர்களாவது படிக்கும் வகையில் தொழில் கல்விக்கு ஏற்பாடு செய்யவேண்டும். இந்தத் திட்டத்திலே விடப்பட்டு இருந்தால் தக்க கவனம் செலுத்துமாறு கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டுதான் நம்முடைய நாட்டிலே காரியங்கள் நடக்கின்றன. அதுதான் நம் நாட்டின் ஜீவ நாடி என்றெல்லாம் சர்க்கார் ரிப்போர்ட்டுகள் கூறுகின்றன. நேஷனல் இன்கம் என்பதைப்பற்றிச் சொல்லும்பொழுது, விவசாயத்திலிருந்து 47 சதவிகிதம் கிடைப்பதாக சர்க்கார் ரிப்போர்ட்டிலிருந்து தெரிகிறது. அதே நேரத்தில் விவசாயம் முன்னேற்றம் அடைய அணைக்கட்டுகள் கட்டுவதற்கும், குளங்களை மராமத்து செய்வதற்கும் ஏராளமான பணம் செலவிட வேண்டியிருக்கிறது.

10th November 1961] [Sri D. S. Authimoolam]

லட்சக்கணக்கான குளங்கள் இருக்கின்றன. இந்த மாராமத்து வேலை ஆமை வேகத்தில்தான் நடக்கிறது. டிபார்ட்மென்டுகள் பெருகிக் கொண்டிருக்கின்றன. ஆனால் அதற்கு தகுந்தபடி அலாட்மென்ட் கிடையாது. இரண்டரை கோடி அல்லது 3 கோடி என்று அலாட்மென்ட் செய்கிறார்கள். அதையும் காலாகாலத்தில் எஸ்டிமேட்டுகள் போட்டு சாங்ஷன் செய்யாமல், அந்த அலாட்மென்ட் செய்த தொகையும் ஸரண்டர் செய்யப்படுகிறது. இந்த முறையில்தான் நீர்ப்பாசன இலாகா வேலை செய்து வருகிறது.

கடைசியாக நான் ஒரு வார்த்தை சொல்லி முடித்துக் கொள்கிறேன். நீர்ப்பாசனத்தை எடுத்துக் கொண்டால், சர்க்காருடைய எந்த ரிப்போர்ட்டிலும் சரி, கவர்னர் உரையிலும் சரி, பட்ஜெட் உரையிலும் சரி, ஐந்தாண்டுத் திட்டப் புத்தகங்களிலும் சரி, ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறார்கள். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டப் புத்தகத்திலே 5-ம் பக்கத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:

"Almost all the available sources of water in the State have been tapped and the line of further expansion lies mainly in improvements to minor irrigation sources."

அதையேதான் 21-ம் பக்கத்திலேயும், 66-ம் பக்கத்திலேயும் சொல்லியிருக்கிறார்கள். எல்லா மேஜர் ஸ்கீம்களையும் நிறைவேற்றி விட்டதாகச் சொல்கிறார்கள். எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரையில், 85 லட்சம் ரூபாய் எஸ்டிமேட்டில் "கடனா நதி" திட்டம் ஒன்று இருக்கிறது. கிட்டத்தட்ட 10,000 எக்கர் நிலம் பாசனத்திற்கு வரும். ஐம்பது வருஷத்திற்கு முன்பே இந்தத் திட்டம் பரிசீலனையில் இருந்துவந்து, சென்ற 5 அல்லது 6 வருஷமாக கொஞ்சம் வேகம் கொடுக்கப்பட்டு, மூன்றாவது திட்டத்தில் இது சேர்த்துக்கொள்ளப்படும் என்று விளம்பரமும் சாற்றப்பட்டது. அப்படியிருந்தும் இந்தத் திட்டத்திலே அது சேர்க்கப்படவில்லை. அதற்கு வேண்டிய பணம் ஒதுக்கப்படவில்லை. இந்தப் புத்தகத்தில் அதைப்பற்றி பேச்சு மூச்சே இல்லை. ஆகவே, உங்கள் ரிப்போர்ட்டிலே எல்லா இரிகேஷன் பெஸிலிட்டிகளையும் உபயோகப் படுத்திவிட்டோம் என்று சொல்லுவது தவறு. எங்கள் ஜில்லாவில் இரண்டு திட்டங்கள் கைவிடப்பட்டிருக்கின்றன. மற்ற ஜில்லாக்களில் நிலைமை என்னவோ? இந்த ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் விலைவாசிகளை ஏற்றுகிறீர்களே தவிர, சென்னை சர்க்கார் மந்திரிகளாகிய நீங்கள், எதிர்பார்த்த திறமை அளவுக்கு உருப்படியான பெரிய காரியங்களைச் செய்யவில்லை என்று கூறிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மூன்றாவது திட்ட அறிக்கை பல எதிர்க்கட்சித் தலைவர்களையும் குழுவிலே சேர்த்து அமைத்து, தீர ஆலோசித்து தீட்டப்பட்ட திட்டங்களுடன் கூடியது என்று நேற்று கனம் நிதி அமைச்சரவர்கள் சொன்னார்கள். ஆயினும், இந்தத் திட்டங்களை குறைகூற முற்பட்ட எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் எல்லோருமே, "ஏறத்தாழ, ஏறத்தாழ" என்று பேசி முடித்து

1-00 p.m.

[Srimathi T. N. Anandanayaki] [10th November 1961

விட்டார்கள். என்னென்ன குறைகள் என்று எதையும் குறிப்பாகச் சொல்லவில்லை என்பதைப் பார்க்கும்போது, நான் நினைக்கிறேன், இந்தத் திட்டத்தில் குறைகளே இல்லை, அப்படி ஏதாகிலும் இருந்தாலும், அதை நிவர்த்திக்க நம் மாநிலத்திற்கு திறமை இருக்கிறது என்பதினால்தான். ஆகவே, குறை கூற வேண்டும் என்று இருந்தாலும், "ஏறத்தாழ ஏறத்தாழ" என்று தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைச் சொன்னார்கள். ஏறத்தாழ நல்ல முறையிலே தான் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தீட்டியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்கமுடியாது, மறைக்கவும் முடியாது என்று எண்ணுகிறேன்.

இன்றைக்கு ரூ. 291 கோடி அளவுக்குத் திட்டம் தீட்டப்பட்டிருக்கிறது. அப்படி சொல்லும்போது 291 கோடிக்குத்தான் திட்டம், அதற்கு மேல் போக மாட்டோம் என்று யாரும் ஐயப்பட வேண்டாம். உதாரணமாக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 159 கோடிக்குத்தான் முதலில் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால், நாம் உண்மையிலேயே 189 கோடி செலவழித்தோம். ஆகவே, சற்றேறக்குறைய 30 கோடி அளவுக்கு அதிகப்படியாக நம் திட்டங்களுக்குக் கொடுக்க மத்திய சர்க்கார் தயாராக இருந்தது என்பதை நாம் மறக்க முடியாது. அதேபோல, இன்றைக்கு 291 கோடி என்று சொல்லும்போது, அதற்கு மேல் ஒரு நயாபைசா கூட அதிகமாகச் செலவழிக்க முடியாது என்று வடக்கு கூறுவது போலவும், தெற்கு அதற்குப் பயந்து கட்டுப்படுவது போலவும் பேசுவது நாட்டில் உண்மையில் நடப்பதைப் புரிந்துகொள்ளவில்லை என்றுதான் நாம் கொள்ளவேண்டும். அப்படிப்பட்ட மடக்கு வாதத்தை வடக்கு போட்டால், 159 கோடியிலிருந்து 189 கோடி அதிகமாகச் செலவழித்துப் பெறும் ஆற்றல் இருந்திருக்க முடியாது. திட்டங்களை எந்த அளவுக்கு வெற்றிகரமாக நிறைவேற்றுகிறோமோ அந்த அளவுக்கு அதிகப்படியான வாய்ப்புகள் இருக்கின்றன என்பதை உணர்ந்தாலே போதுமானது. ஆகவே, அந்த வகையில், 291 கோடி மாநிலப் பொறுப்பில் செலவழிக்க இருக்கிறோம். மேலும் மத்திய சர்க்கார் பொறுப்பில் சற்றேறக் குறைய 190 கோடி அளவுக்குத் திட்டங்கள் வருகின்றன. இதையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் குறைந்தது 500 கோடியளவில் நம் மாநிலத் திட்டங்கள் அமைகின்றன என்பதை கனம் அங்கத்தினர்கள் மனதில் வைக்க வேண்டும். ஆண்டுக்கு ஆண்டு எடுத்துக் கொள்ளப் போகும் திட்டங்களை சேர்த்து எடுத்துக்கொண்டு பார்த்தால் உண்மை விளங்கும். இரண்டாவது திட்டத்தைப் போலவே, இந்த மூன்றாவது திட்டத்திலும் அதிகமான அளவில் திட்டங்களை நிறைவேற்ற முடியும் என்பதை, திட்டத்தின் எல்லாத் தலைப்பின் கீழும் கொடுக்கப்பட்டிருக்கும் விவரங்களைப் பார்த்தால் விளங்கும். அதெல்லாம் மிக விவரமாக இந்தப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இதிலே மின்சார உற்பத்திக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நூறு கோடி அதற்கென்று ஒதுக்கியிருக்கிறோம். கடைசியில் என்ன கூறியிருக்கிறார்கள் என்று பார்த்தால், மூன்றாவது திட்ட இறுதியில் சற்றேறக்குறைய 27 பர்சென்ட்

10th November 1961] [Srimathi T. N. Anandanayaki]

மேலும் தேவைப்படும். அந்த அளவுக்குக் குறைவாகத்தான் கிடைக்கும். ஆகவே, அணுசக்தி நிலயம் அவசியமாகிறது. ஆகவே, அதையும் வற்புறுத்தி, இந்த மூன்ருவது திட்டத்திற் குள்ளாகவே அணுசக்தி நிலயத்தை நம் மாநிலத்தில் நிறுவ ஏற்பாடு செய்தால், திட்ட இறுதியில் அந்தப் பற்ருக்குறையும் இல்லாமல், முன்னேற்றத்திற்கு வழி கோலியவர்களாவோம். அதை நம் மாநில சர்க்கார் மறக்கக் கூடாது. இந்த மூன்ருவது திட்டத்தில் அந்த நிலயத்தை ஏற்படுத்த வழிகோலுவதும் அவசியம்.

சில துறைகளுக்கு மிக்க குறைவான தொகையே ஒதுக்கப் பட்டிருக்கிறது. அதன் காரணம் தெரியவில்லே. பொது சுகாதாரத் திற்கு இரண்டாவது திட்டத்தில் இருந்ததைவிட குறைவாக இருக் கிறது. கிராமப் பக்கத்தில் தண்ணீர் வசதிக்கு என்று 324 லட்சம் என்று இருந்தது. இன்றைக்கு அது 150 லட்சமாகத்தான் இருக் கிறது. குறைவுக்குக் காரணம் தெரியவில்லே. இன்னும் கிராமப் புறங்களில் தண்ணீர் வசதி கொடுக்க வேண்டுமென்ருல், கிணறு வெட்டுவது என்ருல், அது லோகல் டெவலப்மென்ட் டிபார்ட்மென்டு செய்ய வேண்டுமா, ரூரல் வாடர் சப்ளேக்காரர்கள் வெட்டுவதா என்பது பிரச்சினேயாக இருக்கிறது. பலருக்கும் அதிகாரம் இருந் தாலும், ஒருவரும் அதைச் செய்வதில்லே. ஆகவே, இன்னும் பல கிராமங்கள் தண்ணீர் வசதியே இல்லாமல் இருக்கின்றன. அரசாங்கம் 75 பர்சென்ட் கொடுத்து, பஞ்சாயத்து 25 பர்சென்ட் கொடுப்பதானுலும், சில அக்கறை இல்லாத பஞ்சாயத்துக்கள் 25 பர்சென்டும் கொடுக்காமல் இருப்பதனுல், சர்க்கார் கொடுக்கும் 75 பர்சென்டும் பயன்படாமல் போய்விடுகிறது. ஆகவே, கிராமப் புறத்தில் தண்ணீர் வசதியே இல்லாமல் போகிறது. ஆகவே, இந்த மூன்ருவது திட்டத்திலாவது இதுபற்றி தீர ஆலோசித்து இதற்கு முக்கியத்துவம் கொடுத்து, முடிந்தால் அதிகமான தொகையைப் பெற்று இந்தத் திட்டங்களே நிறைவேற்ற வேண்டும். இம்மாதிரிச் சிறுசிறு சீர்திருத்தங்களேச் செய்வதால்தான், உண்மையிலேயே முன்னேற்றம் காணமுடியும் என்பதை உணர்ந்து, இதற்காக தொகையை அதிகரிக்கலாம்.

பொது சுகாதாரத்திற்கு மிக்க குறைவான தொகை தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மூன்று கோடிதான் ஒதுக்கப்பட்டிருக் கிறது. க்ஷயரோகம் போன்ற நோய்களேத் தீர்க்க கவனம் செலுத்தியாக வேண்டும். இன்றைக்கு க்ஷயரோகத்திற்கு மருத்துவ வசதி மிகமிகக் குறைவு. தாம்பரத்திற்கு சிகிச்சைக்குப் போனுல், வருஷக் கணக்காக நோயாளிகள் காத்திருக்க வேண்டி யிருக்கிறது. அதிக காலத்திற்குக் கொடுக்க வேண்டிய வசதிகள் கிடைக்காமல் மக்கள் அவதியுறுகிருர்கள். உள்ளே போகிறவர்கள் வெளியே வருவதேயில்லே; வெளியே நிற்கிறவர்கள், வெளியேயே நின்று கொண்டிருக்கிருர்கள். உள்ளே போக வழியில்லே. இப்படி க்ஷயரோகத்தால் அவதிப்படுபவர்கள், மருத்துவ சிகிச்சைக்கு வழி யில்லாமல், ஆஸ்பத்திரிக்குப் போகலாம் என்ருல், அவர்களுக்கு அட்மிஷன் கடிதம் வருவதற்குள் அடுத்த உலகத்திலிருந்து கடிதம்

[Srimathi T. N. Anandanayaki] [10th November 1961

வந்து விடுகிறது. அந்தப் பிரயாணத்தை ஆரம்பித்து விடுகிறார்கள். ஆகவே, இதையெல்லாம் உணர்ந்து இன்னும் அதிகமாகப் பணத்தை ஒதுக்கி, இரண்டு மாவட்டங்களுக்கு ஒரு சானடோரியம் விதம் அமைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இன்றைக்கு தஞ்சையில் ஒன்று, திருச்சியில் ஒன்று, கோவை மாவட்டத்தில் ஒன்று என்றுதான் இருக்கிறது. பதின்மூன்று ஜில்லாக்களைக் கொண்ட இந்த மாநிலத்தில் மாவட்டத்திற்கு ஒன்று என்று ஆஸ்பத்திரிகள் அமைத்தால்தான், சென்னை ஆஸ்பத்திரியில் நெருக்கடி குறையும். நகரப்புறத்து மக்களுக்கு கொஞ்சமாவது வசதி கிடைக்கும். ஆகையினால், இந்த 3 கோடி கொஞ்சமும் போதாது.

பின் தங்கிய வகுப்பினருக்கு உதவி கொடுக்கும் விஷயத்திலும், இரண்டாவது திட்டத்தில் 4½ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இன்றைக்கு இந்த மூன்றாவது திட்டத்தில் 3¼ கோடி தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் "டி-நோடிபைட்" ஜாதி யாரையும் சேர்த்திருக்கிறது. அதையெல்லாம் விட்டுப் பார்த்தால், பின் தங்கிய வகுப்பினருக்குக் கிடைப்பது 40 லட்சம்தான். இது மிக மிகக் குறைவு என்பதைக் கல்வி அமைச்சரவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பின் தங்கிய வகுப்பினர் என்று சொல்லும்போது, ஜாதியின் அடிப்படையில் உதவியளித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று சொல்லவில்லை. அவர்களும் பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களாகவும் இருக்கிறார்கள். வருஷம் 1,500 ரூபாய் வருமானம் என்று வைத்தால், மாதம் 125 ரூபாய் ஒருவன் சம்பாதித்தால், அவனுக்கு நான்கு குழந்தைகள் இருந்தால், ஒரு குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புவதுகூட முடியாத காரியம். அவர்களுக்குப் பண உதவியளிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படி அவர்கள் விரும்பும் பணம் கொடுக்கப்படாமல் போய்விட்டால், அவர்கள் முன்னேறுவது எப்படி? பின் தங்கியவர்கள் எப்பொழுதும் பின் தங்கியவர்களாகவே இருந்து, அவர்களுக்கு ஜாதி அடிப்படையில் உதவியளித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று சொல்லும் தன்மையல்ல என்னுடையது. ஆனால், அவர்கள் எவ்வளவு சீக்கிரம் முன்னேற முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முன்னேறி, முற்பட்ட இனத்திற்குக் கொண்டுவரப்பட்டால்தான், அவர்களும் சமுதாயத்தில் சங்கடமாக இல்லாமல் வாழ முடியும். ஆகவே, இந்த 40 லட்சம் ரூபாய் என்பது அவர்களுக்கு வசதிகளை அதிகரிக்கப் போதாது. அதையும் பிரித்துப் பார்த்தால், ஆண்டுக்கு 8 லட்சம்தான் வரும். அது கடலில் கரைத்த பெருங்காயம் போல்தான் இருக்கும். மத்திய சர்க்கார் உதவி பின் தங்கியவர்களில், 75 பர்சென்ட் மார்க்கு வாங்கிய மாணவனுக்குக்கூட கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. எழுபத்து-ஐந்து சதவிகிதம் மார்க் வாங்குவதென்றால் பின் தங்கிய வகுப்பினர்களைச் சேர்ந்த மாணவர்களுக்கு எவ்வளவு கஷ்டம் என்பதை புரிந்துகொள்ள வேண்டும். சமுதாயத்தில் பல திட்டங்களை உருவாக்குவதைக் காட்டிலும், பின் தங்கிய வகுப்பினர்களுக்கு அதிகப் பணம் ஒதுக்கி அவர்களை முன்னுக்குக் கொண்டு வருவதினால் அதிக நன்மை உண்டாகும். ஆகையால்,

10th November 1961] [Srimathi T. N. Anandanayaki]

அந்த அடிப்படையில் ஒதுக்கியிருக்கும் பணம் மிகமிகக் குறைவு. மூன்றரை கோடி ரூபாய் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கிய நாம் அதில் பாதித் தொகையாவது பின் தங்கிய வகுப்பினர்களுக்கு ஒதுக்கி யிருந்தால் பரவாயில்லை. நாற்பது லட்சம் ரூபாய் அளவுக்குத் திட்டங்கள் வகுத்துத் தொகை ஒதுக்கியிருப்பது பாராட்டுக்கு உரியதாகாது என்று நான் வருத்தத்தோடு சொல்கிறேன்.

சென்னை நகரத்தைப் பொறுத்தவரை, பக்கிங்காம் கனல், கூவம் இவ்விரண்டையும் அபிவிருத்தி செய்வதற்குக் கமிஷன் போட் டார்கள். தீர ஆலோசிக்கிறோம் என்று கூறினர்கள். கார்ப்ப ரேஷனிலும் ஒரு திட்டம் தீட்டினர்கள். அது என்ன ஆயிற்று என்று திட்டத்திலே காணும். கூவம் நாற்றத்தை உடனடியாக நீக்க வழி காண வேண்டும். அப்பொழுதுதான் நகரத்தில் ஓரளவு மக்களுக்குச் சுகாதார வசதி பெருக முடியும். பக்கிங்காம் கனலை ஆழப்படுத்தினல் போக்குவரத்துக்கு இன்னும் வசதியாக இருக்கும் என்று சொல்லப்பட்டது. இந்த இரண்டிலும் கவனம் செலுத்தப்படாதது வருந்தத்தக்கது.

தொழில்கள் நம்முடைய மாநிலத்தில் அபிவிருத்தியாக வேண்டு மென்று எத்தனையோ கோடி ரூபாய் ஒதுக்குகிறோம். அபிவிருத்தி காண வேண்டுமென்று ஆசைப்படுகிறோம். ஆனல், நிர்வாகத் துறையிலே ஓரளவு சங்கடங்கள் இருப்பதால் இன்னும் பல சிறு தொழில்களை ஆரம்பிக்க வசதி இல்லாமலிருக்கிறது. மாநில அரசாங்கம் எஸென்ஷியாலிடி சர்டிபிகேட் கொடுத்து, மத்திய அரசாங்கத்திடமிருந்து சில பொருள்களைப் பெறவேண்டியிருக் கிறது. எஸென்ஷியாலிடி சர்ட்டிபிகேட் பெறுவதில் சில சங்கடங்கள் இருக்கின்றன, நம் மாநிலத்தில். ஆனல், பிற மாநிலங்களில் தாராளமாக இந்த சர்ட்டிபிகேட் கொடுக்கிறார்கள். காரணம், சர்டிபிகேட் கொடுத்துவிட்டால், சம்பந்தப்பட்டவர்கள் தங்கள் செல்வாக்கை வைத்து, மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறக்கூடியதைப் பெற்றுக்கொள்ளட்டும், அதனல் நம்முடைய மாநிலத்திற்கு லாபம்தானே என்று தாராள மனப்பான்மையோடு பிற மாகாணங்கள் எஸென்ஷியாலிடி சர்ட்டிபிகேட் தந்து விடுகிறார்கள். ஆனல் நம்முடைய இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட் மெண்ட் நிர்வாகத்தைப் பொறுத்த வரையில் அவர் களிடமிருந்து எஸென்ஷியாலிடி சர்ட்டிபிகேட் வாங்குவதே பெரிய கஷ்டமாக இருக்கிறது. 'இல்லை' என்று சொல் வதிலே அவர்களுக்கு ஒரு பெரிய ஆசை இருக்கிறது. இல்லை யென்று சொல்வதில் ஆர்வம் காட்டுகிறார்கள். ஆகையால், கொஞ்ச நஞ்சம் ஆசையோடு தொழில் ஆரம்பிக்க முன்வருகிறவர்கள்கூட, இந்த சர்ட்டிபிகேட் வாங்குவதிலேயே இவ்வளவு கஷ்டம் இருக்கும் போது, பின்னல் தொழில் ஆரம்பித்தால் என்ன என்ன கஷ்டம் இருக்குமோ என்று அஞ்சி ஓடக்கூடிய நிலைமையை இண்டஸ்ட்ரீஸ் இலாகாவினர் ஏற்படுத்தி விடுகிறார்கள். இதனல், மத்திய அரசாங் கத்திலிருந்து பெறக்கூடிய வசதிகளைக்கூடப் பெற முடியாத நிலை இருக்கிறது. ஆகவே, இதைச் சற்று தளர்த்திவிட்டால், நலமாக

[Srimathi T. N. Anandanayaki] [10th November 1961

இருக்கும். அவரவர்கள் தங்கள் செல்வாக்கை வைத்து, மத்திய அரசாங்கத்திடமிருந்து தேவையான பொருள்களை வாங்கித் தொழில்கள் ஆரம்பிக்க நலமாக இருக்கும். அதைச் செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

நம்முடைய மாநிலத்திற்குக் கதிர்கள் வழங்குவதில் இன்னும் சற்று அதிகமாக்கியிருக்க வேண்டும். ஐம்பது ஆயிரம் ஸ்பிண்டில்கள்தான் ஒதுக்கியிருக்கிறார்கள். கோவை மாவட்டத்தில் எத்தனையோ மில்கள் இருக்கின்றன. அதனால் தமிழகம் முன்னேறியிருக்கிறது என்று ஸ்பிண்டில்களைக் குறைத்துக் கொடுக்கிறார்களா என்று தெரியவில்லை. நம் மாகாணத்தில் பெரும்பாலும் ஸ்பின்னிங் மில்கள்தான் இருக்கின்றன. பிற மாகாணங்களில் காம்பொஸிட் மில்கள் (நூற்பு, நெசவு இரண்டும் சேர்த்து செய்யும் மில்கள்) அதிகமாக இருக்கின்றன. நம்முடைய மாநிலத்தில் வெறும் நூற்பு மில்கள்தான் இருக்கின்றன. நம் மாநிலத்தில் கைத்தறி நெசவாளர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்களுக்கே முக்கால் பங்கு உற்பத்தியையும் கொடுக்கும் சூழ்நிலை இருக்கிறது. நம்முடைய மாநிலத்தைப் பிற மாநிலங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமக்குக் கதிர்களை குறைப்பது சரியல்ல. இதைக்காட்டிலும் அதிகமாக வாங்க வழி கோலுவது மிகவும் அவசியம்.

சென்னையைப் பொறுத்த வரையில் நேபியர் பாலம் போன்ற பாலங்களை விஸ்தரிக்க வழி செய்திருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் பேஸின் பிரிட்ஜ் இன்னும் குறுகலாக இருக்கிறது. அதன் வழியாக அதிகமான லாரிகள் போய்க் கொண்டிருக்கின்றன. நெல்லூர் போகும் பாதையாக இருப்பதால், போக்குவரத்து அதிகம் இருக்கிறது. அந்தப் பாலத்தை அகலப்படுத்துவதற்கு அக்கறை காட்டி, அதையும் எப்படியாவது திட்டத்திலே சேர்த்து விடுவார்களானால், அது வரவேற்கத்தக்கதாக இருக்கும்.

கல்கத்தா நகரத்திற்கு அமெரிக்க நிபுணர்கள் மாஸ்டர் ப்ளான் கொண்டு வந்திருக்கிறார்கள். சென்னைக்கும் அம்மாதிரி கொண்டு வருவது நல்லது. நிதி அமைச்சர் அவர்கள் அமெரிக்காவிலிருந்து வந்திருப்பதால், அவரே அங்கிருந்து அதற்கான ஒரு திட்டம் எடுத்து வந்திருக்கலாம். அவரே அமெரிக்க நிபுணர்களை அழைத்து, கல்கத்தாவைப்போல் சென்னை நகரத்திற்கும் ஒரு மாஸ்டர் ப்ளான் தயாரிக்க வகை செய்வார்களானால், சென்னை நகரம் சிறந்த முறையில் அபிவிருத்தி அடைவதற்கு வழி ஏற்படும். அதனால், சென்னை நகரத்தைச் சேர்ந்த எங்களைப் போன்ற உறுப்பினர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவோம்.

வட சென்னையில் பெண்களுக்கான ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஒன்று ஏற்படுத்துவது மிகவும் அவசியம். தற்பொழுது வட சென்னையிலிருந்து பெண்கள் தென் சென்னைக்கு வர வேண்டியிருக்கிறது. அங்கே மக்கள் தொகை அதிகம். ஆகவே, வட சென்னையில் ஒரு பயிற்சிப் பள்ளி பெண்களுக்கென ஆரம்பித்தால் நலமாக இருக்கும். கனம் கல்வி அமைச்சர் அவர்கள் இதுபற்றி

10th November 1961] [Srimathi T. N. Anandanayaki]

கவனம் செலுத்தி, வட சென்னையில் பெண்கள் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஒன்று துவக்க இந்தத் திட்டத்தில் வகை செய்வார்களானல் வரவேற்கத்தக்கதாக இருக்கும். எப்படியாவது இந்தக் கோரிக்கையைப் பூர்த்தி செய்வார்கள் என்று நான் நம்புகிறேன்

சேதுசமுத்திரத் திட்டத்தைப்பற்றி பல அங்கத்தினர்கள் கூறியிருக்கிறார்கள். சேது ரஸ்தாத் திட்டத்தைப் பற்றியும் கூறியிருக்கிறார்கள். சேதுசமுத்திரத் திட்டம் சேர்க்கப்பட்டிருக்கிறது. சேது ரஸ்தாத் திட்டத்தைக் காணேம். அது மிகவும் அவசியம். அதைக் கவனித்து மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துவிடுவதற்கு வழி செய்யவேண்டும். இப்படிக் கொஞ்ச நஞ்சம் விட்டிருக்கும் குறைகளையும் நிவர்த்தித்து விட்டால் எதிர்க்கட்சியினர் 'ஏறத்தாழ' என்று பேசுவதற்கே இடமில்லாமல் அவர்கள் பேசாத அளவுக்கு அவர்களை உட்கார வைத்துவிடலாம். இந்தத் திட்டங்களுக்கு எதிர்க் கட்சியினர் 'ஏறத்தாழ' ஆதரவைக் கொடுத்தால்கூடப் போதும் என்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI HEMALATHA DEVI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையை வரவேற்று ஒருசில விஷயங்களை எடுத்துக் கூற விரும்புகிறேன். நம்முடைய அன்ருட நடவடிக்கைகளில்கூட எந்தக் காரியத்தைச் செய்ய வேண்டுமென்ருலும், ஒரு திட்டம் வகுத்துக் காரியம் செய்தால் தான் அக் காரியம் நல்ல முறையில் செவ்வையாக நடைபெற ஏதுவாக இருக்கும். அதுபோன்றுதான் இன்றையதினம் நம்முடைய நாட்டின் முன்னேற்றத்திற்காக நம் அரசாங்கம் ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்து நிறைவேற்றி வருகிருர்கள். முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இவைகளை வெற்றிகரமாக நிறைவேற்றிவிட்டு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை இப்பொழுது சபையிலே கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிருர்கள். இதில் பல துறைகளுக்கு அதிகமாகப் பணம் ஒதுக்கி நாட்டை முன்னேற்றுவதற்கான வகை செய்யப்பட்டிருப்பது மிக மிக வரவேற்கத் தக்கது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் மனப்பூர்வமாகப் பாராட்ட வேண்டிய நிலையில் இருக்கிருேம்.

நம்முடைய நாட்டில் பொருளாதாரத் துறையில் எல்லா மக்களும் சமத்துவமான நிலையை அடைய வேண்டுமென்று பல திட்டங்களை வகுத்தாலுங்கூட, நாட்டில் எல்லாப் பொருள்களின் விலைவாசியும் உயர்ந்திருக்கிறது. அதை முதலில் கட்டுப்படுத்த வேண்டும். அதற்கு ஒரு வழி காண வேண்டியது மிக மிக அவசியம். இது யாரும் மறுக்க முடியாத ஓர் உண்மையாகும். ஒரு நாடு முன்னேற வேண்டுமானல், அந்த நாடு ஒற்றுமையுடன் பாடுபட்டால் கண்டிப்பாக முன்னேற்றம் அடைந்துவிடும். கூட்டுறவு முறையினல்தான் நாடு முன்னேற்றம் அடையும். இது யாவரும் அறிந்த உண்மை. அதை அனுசரித்து நம்முடைய

மாநிலத்தில் உணவு உற்பத்தியை அதிகப்படுத்த ஏற்பாடுகளைச் செய்யும் அரசாங்கம் எங்கு பார்த்தாலும் கூட்டுறவு சங்கங்களை அமைத்து, விவசாயிகளிமிருந்து உணவுப் பொருள்களை நல்ல விலைக்கு வாங்கிச் சேமித்து வைத்து அதை ஒரு நிதானமான விலைக்கு விற்க வகை செய்வார்களானால் அது நல்லதாக இருக்கும். கூட்டுறவு சங்கங்கள் விற்கும் விலைக்கே மற்றவர்களும் விற்கக் கூடிய நிலையில் விலைவாசி ஒரு கட்டுப்பாட்டில் வந்துவிடும். மற்றவர்கள் அதிக விலை வைத்து விற்க முடியாமல் போகும். எனவே, நம்முடைய மாநிலத்தில் எங்கு பார்த்தாலும் கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்தி, நம்முடைய அரசாங்கம் உணவுப் பொருள்களைச் சேமித்து மக்களுக்கு நியாய விலைக்கு விற்க முற்பட வேண்டும். இது மிகவும் அவசியம் என்பதை நான் எடுத்துக்கூற விரும்புகிறேன். அதேசமயத்தில் விவசாயிகள் பாதிக்காத வகையில் வழி செய்ய வேண்டும். அவர்கள் வாங்கக்கூடிய பொருள்களுக்கு மிக அதிகமாக விலை கொடுக்க வேண்டி இருந்தது. அவர்கள் உற்பத்தி செய்கிற பொருள்களுக்கு விலையைக் குறைத்தால் அவர்கள் வருந்த வேண்டி நேரிடும். ஆகவே, விவசாயிகளுக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் கூட்டுறவு சொஸைடிகள் மூலமாக அவர்களுக்குக் குறைந்த நியாயமான விலையில் கிடைக்க வழி செய்துவிட்டு உணவுப் பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்துவது நியாயமாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அன்று ஔவையார் "சாதி இரண்டொழிய" என்றாள். இந்த நாட்டில் ஆண் சாதி, பெண் சாதி என்ற இரண்டே இரண்டுதான் இருக்க வேண்டும் என்ற உயர்ந்த கொள்கையை எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். நாம் எல்லோரும் இந்தியர்கள் என்ற எண்ணமும், இந்தியா தேசத்தில் நாம் வாழ்கிறோம் என்ற ஒற்றுமை உணர்ச்சியும்தான் நாட்டில் வளர வேண்டும். பற்பல சாதிகளினால் நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருந்த சண்டைச் சச்சரவுகளை நாம் அறிவோம். தேசிய ஐக்கியத்திற்கே உலை வைக்கக் கூடியது சாதிகள் என்றால், சாதிகள் ஒழிய வேண்டியது அவசியம்தான். அதை வரவேற்கிறேன்.

ஆனால் ஒன்று. சமுதாயத்தில் இருந்த பெரிய ஏற்றத் தாழ்வுகளை ஒழித்து எல்லோரும் சமமான வாழ்வு பெறுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்பதற்காக தாழ்த்தப்பட்டவர்கள், பிற்பட்டவர்கள், முற்பட்டவர்கள் என்று சாதிகளை நாம் தொகுத்து முற்பட்டவர்களுக்குச் சமமாகத் தாழ்த்தப்பட்டவர்கள், பிற்பட்டவர்கள் வரவேண்டும் என்கிற லட்சியத்தில் பல சலுகைகளை அளித்துக் கொண்டிருக்கிறோம். என்றைக்குத் தாழ்த்தப்பட்டவர்களே கிடையாது, பிற்பட்ட இனம் என்றே இல்லை என்கிற லட்சியத்தை பொருளாதாரத் துறையில் கல்வித் துறையில் நாம் அடைந்துவிடுகிறோமோ அன்றைக்குச் சாதிகளையும் ஒழித்துவிடலாம். ஆனால், இன்றையதினம் சாதிகள் பெயரளவிலாவது—அவர்கள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொள்வதற்குச் சாதியை சொல்ல வேண்டியிருக்கிறது.

நேற்று ஒரு பத்திரிகையில் பார்த்தேன். அரசாங்க உத்தியோக விண்ணப்பு பாரங்கள், பள்ளி மாணவர்கள் அட்மிஷன் பாரங்கள் இவற்றில் எல்லாம் இனி சாதிப் பெயரைக் குறிப்பிட வேண்டிய இடத்தையே அச்சிடக்கூடாது என்றும், மதத்தை மட்டும்தான் குறிப்பிட வேண்டும் என்றும் அரசாங்கம் உத்தரவிட்டிருப்பதாகவும் கோர்ட் விவகாரங்களில்கூட ஜாதியைக் குறிப்பிடக்கூடாது என்றும் பிரசுரித்திருந்தது. அதுவும் இரண்டாவது திட்டத்தில் பிற்பட்ட இனத்தவர்களுக்காக நாம் ஒதுக்கிய தொகை 20 லட்சம் என்றால் இப்போது எட்டு லட்சம்தான் கூடுதலாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதுவும் கிட்டத்தட்ட 150-க்கும் மேற்பட்ட பிரிவுகள் கொண்ட பிற்பட்ட இனத்தவர்களுக்கு உதவி செய்வதற்காக இந்தத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஏனுதி, ஜம்பன், ஜோகி என்பது போன்று எத்தனையோ சாதிகள் உள்ளன. அத்தனை சாதிகளும் தற்போது முற்பட்டவர்களின் நிலையை அடைந்துவிட்டனவா? சோஷலிச சமுதாயத்தையும் எல்லோரும் ஓரினம் என்றும் ஏற்படுத்த விரும்பும் நம் அரசாங்கம், அவர்கள் சலுகைகளைப் பெற்று முன்னேற வரும்போது இலையில் சாப்பாட்டைப் போட்டு விட்டு கழுத்தைப் பிடிப்பது போன்று இருக்கிறது. பெருவாரியான பிற்பட்டவர்களுக்கு ஒதுக்கிய தொகையும் மிகக் குறைவு. மேலும் ஜாதியைத் தெரிவிக்கக் கூடாது என்றால், தாழ்த்தப்பட்ட மக்களும், பிற்பட்ட இனத்தவர்களும் எங்கு பழைய நிலையை அடைந்துவிடுவார்களோ என்றுகூட பீதியை அளிக்கிறது. எனவே, எல்லோரும் சமத்துவ நிலை அடைந்து, பொருளாதாரத்திலும் கல்வியிலும், உத்தியோகங்கள் பெறுவதிலும் சம நிலை ஏற்படும் வகையிலாவது இந்தச் சாதிப் பெயர்கள் இந்த பாரங்களில் குறிக்கப்படுவதில் தவறு உண்டா என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். எப்போதும் இவர்களுக்குச் சலுகை நீடிக்க வேண்டும் என்று நான் சொல்ல விரும்பவும் இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பிற்பட்ட இனத்தவர்களுக்குச் சர்க்கார் அளிக்கும் சலுகைகளை அதிகரித்து சீக்கிரத்தில் அவர்களை முன்னேறச் செய்து பின்னர் ஜாதி வேண்டாம் எனக் கூறட்டும். அதை எல்லோரும் வரவேற்பார்கள் என்று எடுத்துக் கூற விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக அணை கட்டும் விஷயத்திலே இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலேயே எல்லாப் பெரிய அணைகளையும் கட்டி முடித்துவிட்டார்கள். உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற அடிப்படையில் நீர்பாசனத் திட்டங்களில் எல்லாப் பெரிய ஆறுகளுக்கும் அணைகள் கட்டியாகிவிட்டன. இன்னும் ஒருசில ஆறுகள் சம்பந்தமாகத்தான் முடிவு எடுக்க வேண்டும். குறிப்பாக என்னுடைய தொகுதியில் கட்டவேண்டிய அணைபற்றி இந்தச் சபையில் பல தடவை செல்லியிருக்கிறேன். சின்னறு என்று ஓர் ஆறு ஓடுகிறது. அதில் ஓரிடத்தில் 40 லட்சம் ரூபாயிலும் அதோடு 4 கிளை ஆறுகள் கூடும் இன்னெரு இடத்தில் 75 லட்சம் ரூபாயிலும் அணை கட்டலாம் என்றும் இரண்டில் ஓரிடத்தில் கட்டவேண்டும் என்றும் யோசனையை சீப் என்ஜினியரே சொல்லியிருக்கிருர்கள்.

[Srimathi Hemalatha Devi] [10th November 1961

இன்னும் அதிகப்படியான தொகை செலவழிந்தாலும் பரவாயில்லை. மக்களின் நலனில் அக்கறை கொண்ட நம் அரசாங்கம் மல்லேசு வரம் கோயில், வெள்ளைக்கல் மலைச்சாரல் என்ற இடத்தில் அந்த அணையைக் கட்டி முடிக்க வேண்டும். மூன்றாவது திட்டத்திலேயே அந்த வேலை மேற்கொள்ளப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர் சாலைகள் போடுவதுபற்றிப் பேசும்போது ஜில்லாக்களில் எதிலும் 50 மைல்களுக்கு மேல் ரோடுகள் போடப்படவேயில்லை என்றார். புதிய ரோடுகளைப்பற்றிச் சொல்லியிருக்கலாம். அதுகூட அதிகமாகத்தான் இருக்கும். ஒவ்வொரு பிரதிநிதி தொகுதியிலும் எத்தனை மைல்கள் ரோடு போடப்பட்டுள்ளது என்ற புள்ளிவிவரங்களை எடுத்துப் பார்த்தால் அதுவும் 206 அங்கத்தினர்களுடைய தொகுதிகளுமாக எத்தனை மைல் நீள ரோடு போடப்பட்டிருக்கிறது என்பது நன்கு தெரியும். ஏதோ குறை கூறவேண்டும் என்பதற்காக எதை வேண்டுமானாலும் கூறலாமே தவிர, அவர் கூறும் விவரம் முற்றிலும் தவறு என்று எடுத்துக் கூற விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எத்தனையோ நல்ல திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். குடிதண்ணீர் வசதிக்காக பல திட்டங்கள் இருக்கின்றன. இப்படி எல்லா வகையிலும் போடப்பட்டுள்ள திட்டங்களை நாம் வரவேற்க வேண்டும். ஆகவே, நாட்டின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்களாயிருந்து இந்த மூன்றாவது திட்டத்தை மனப்பூர்வமாக வரவேற்று, எல்லாக் கட்சிகளும் இதை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

1-30 p.m.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet against at 8-30 a.m. tomorrow.

The House then adjourned.



## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. STATUTORY RULES AND ORDERS.

383. *Notification issued with Government Memorandum No.* 86326-D2/60-13, *Revenue, dated* 16th *September* 1961 *cancelling the Notification S.R.O. No. A-465 of* 1960, *published at page* 110 *in Part I of the Fort St. George Gazette, dated the* 27th *January* 1960 *in respect of the suit* (*No.* 140 *of* 1955) *properties in Vilamal village, Thanjavur district, belonging to Annadhana Kattalai attached to Sri Thiagarajaswamy Devasthanam, Tiruvarur, Thanjavur district.* [*Laid on the table of the House under section* 116 (3) *of the Madras Hindu Religious and Charitable Endowments Act*, 1959 (*Madras Act* 22 *of* 1959].